# அருள்

தெய்விக மாதப் பத்திரிகை



ஸ்ரீ வடபழநி ஆண்டவர்





தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருகிறது

அருள் 7 ] பிரமாதிச ஆனி (15-6-73) [கருணை 9

# திருமுருகாற்றுப்படை

குன்றமெறிந்ததுவுங் குன்றப்போர் செய்தநுவு
மன்றங்க மாரிடர் தீர்த்ததுவு—மின்றெனைக்
கைவிடாநின்றது வுங்கற் பொதும் பிற்காத்ததுவு
மெய்விடாவீரன் கைவேல்

உன்னையொழிய வொருவரையும் நம்புகிலேன்
பின்னையொருவரையான் பின்செல்வேன்—பன்னிருகை
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்தில் வாழ்வே

முருகனே செந்தில் முதல்வனே மாயோன்
மருகனே யீசன்மகனே—யொருகைமுகன்
றம்பியே நின்னுடைய தண்டைக் காலெப்பொழுது
நம்பியே கைதொழுவேனுன்.

| | | |
|---|---|---|
| ஆண்டுச் சந்தா | ஆயுள் சந்தா | தனிப் பிரதி |
| ரூ. 6-00 | ரூ. 100 | 50 காசு |

சந்தா அனுப்பவேண்டிய முகவரி:
நிர்வாகி, "அருள்," 231, ஆழ்வார்திருநகர், 8-வது கிராஸ்
சென்னை - 600087

# பம்பாயில் பாங்க் ஆப் மதுரை



தலைவர்
திரு. எல். கிருஷ்ணன்
அவர்களின் சாதனை

எளியவர்கள் முன்னேற்றம் அடைவதையே தன் லட்சியமாகக் கொண்டுள்ள பாங்க் ஆப் மதுரை தலைவர் திரு எல். கிருஷ்ணன் அவர்கள் தன் விடா முயற்சியாலும் கடுமையான உழைப்பாலும் பாங்க் ஆப் மதுரையை மிகச் சிறந்த முறையில் நிர்வகித்து வருகிறார்கள்.

அவர்கள் தலைவராகப் பதவி ஏற்றுக் கொண்ட பிறகு பாங்க் வெகு துரிதமாக முன்னேற்றம் அடைந்திருக்கிறது. நிறையப் பேர்களுக்கு வேலை வாய்ப்புக்கள் அளிக்கப்பட்டிருக்கிறது. எளியவர்கள் முன்னேற்ற மடையப் பல புதிய சிறந்த திட்டங்கள் தயாரித்து அவைகள் எளிய மக்களுக்குப் பயன்பட அரும்பாடுபட்டு வருகிறார்கள்.

ஏராளமான கிளைகள் நிறைய ஊர்களில் திறக்கப்பட்டு நன்கு செயல்பட்டு வருகின்றன. இன்னும் பல ஊர்களில் கிளைகள் திறக்க ஏற்பாடுகள் முறையாக விரைவாக செயல்பட்டு வருகின்றன.

சிட்பண்டு தொழில் தொடங்கி சிறப்பாகப் பணியாற்றி வரும் ஒரே வங்கி பாங்க் ஆப் மதுரைதான்.

இவைகளுக்கு எல்லாம் சிகரம் வைத்தாற்போல் சென்ற 23-5-73ல் வடநாட்டில் பம்பாயில் மையமான கோட்டைப் பகுதியில் பாங்க் ஆப் மதுரை கிளை ஒன்று திறக்கப்பட்டு அங்குள்ள மக்களும் பயன் பெற சேவை செய்யத் தொடங்கி இருக்கிறார்கள்.

தலைவர் திரு. கிருஷ்ணன் அவர்கள் பதவிக் காலத்தில் பாங்க் ஆப் மதுரை நிறைந்த அளவில் வளர்ச்சி பெற்று இந்தியாவில், மிகப் பெரிய பாங்கிகளில, தனியார் துறை வங்கியான பாங்க் ஆப் மதுரையும் ஒன்று எனப் பெயர் பெற்று விடும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

பாங்க் ஆப் மதுரைக்கும், அதன் தலைவர் திரு. எல். கிருஷ்ணன் அவர்களுக்கும 'அருள்' பத்திரிகையின் சார்பில் நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

● ஆறுபடை விடுகளில் ஒன்ருன சுவாமிமலை ஆண்டு ஒன்றுக்கு சுமார் நாலு லெட்சம் ரூபாய் வருமானமுள்ள முதல் வகுப்பு கோயில். சென்னை அற நிலைய பாதுகாப்பு இலாகாவின் அதிகாரத்திற்கு உட்பட்ட அறங் காவலர்கள் நிர்வாக அதிகாரி இவர்களின் நேரிடை நிர்வாகத் தில் உள்ள கோவில். இக்கோவி லுக்கு நஞ்சை சுமார் 117 ஏக்கர் 60 செண்டும், புஞ்சை 156 ஏக்கர் 51 செண்டும் நிலங்கள் உள்ளன.

● காசியிலுள்ள தீர்த்த கட்டங்கள் 64. இதில் உள்ள 64 தீர்த்த கட்டங்களிலும் நீராடு வது எல்லாருக்கும் இயலாது. வருணை சங்கம கட்டம், அசி சங்கம கட்டம், தசாசுவமேத கட்டம், பஞ்சகங்கா கட்டம், மணிகர்ணிகா கட்டம் ஆகிய ஐந்து தீர்த்த கட்டங்களிலா வது நீராடுவது நல்லது.

● ஆசையால் தூண்டப்பட்ட மனிதர்கள் வேட்டையில் விரட் டப்பட்ட முயலைப்போல ஓடித் திரிகிருர்கள்.

● எல்லாரிடமும் ஒத்துப்போ கும் மனப்பான்மை இருந்தால் தான் வியாபார உலகில் உன்னத நிலைக்கு வரமுடியும். பலருக்கு அறிவும் திறமையும் எவ்வளவோ இருக்கும். ஒத்துப்போகும் மனப் பான்மை இல்லாத காரணத்தால் முன்னுக்கு வரமுடியாமல் முழிக் கிருர்கள்.

● நமது உடலில் ஒன்பது வாசல்கள் திறந்து கிடக்கின்றன. அவற்றின் வழியே உயிர் எந்தக் கணத்திலும் வெளியேறி விட லாம். ஆனல் வெளியேறுவதில்லை. காரணம் உயிர், நம் உடலில் அன்புக்காக தவமிருக்கிறது.

● தேனில் சிலவகையான அமி லங்கள் கலந்துள்ளன. ஆப்பிள் பழத்தில் நிறைந்துள்ளது போன் றும், ஆரஞ்சு, எலுமிச்சம்பழம் ஆகியவற்றில் கலந்துள்ளது போன்றதுமான அமிலங்கள் இவை. தினசரி காலையில் ஒரு ஸ்பூன் தேன் சிறிது தண்ணீரில் சாப்பிட்டு வந்தால் களைப்பு நீங் கும்.

● நெற்றிக்குத் திருமண் இட்டுக் கொள்வது என்பது எல் லாருக்கும் சாதாரணமாக கிடைக்காது. ஸாக்ஷாத் பகவா னின் திருவடியையே நெற்றியில் தரிக்கிருேம். திருமண் இட்டுக் கொள்வது ஸ்ரீ வைஷ்ணவர்களின் பிறப்புரிமையாகும். கிடைத் தற்கரிய பெருமையை வைஷ்ணவ இளைஞர்கள், பெரியவர்களில் சிலபேர் கைவிட்டு வருகிருர்கள்.

● ஞானம், சக்தி, பலம், ஐசுவ ரியம், வீரியம், தேஜஸ் முதலிய ஆறும் திருமாலுக்குரிய குணங்க ளாகும்.

● உண்ணுகின்ற ஒவ்வொரு முறையும் பல்லை நன்ருக சுத்தம் செய்து வாய் கொப்பளிக்க வேண் டும். உடல் உறுப்புகளில் பல்லில் தான் விஷ சக்தி அதிகம்.

● ஆகமம் என்றால் தொன்று தொட்டுவரும் பழைமையான அறிவு அல்லது சாஸ்திரம் என்று பொருளாகும். வைஷ்ணவர்கள் வேதத்தைப்போல் ஆகமங்களுக்கும் ஏற்றம் கூறுவார்கள். கோவில்களிலும், வீடுகளிலும் ஆராதிக்கப்படும் திருமால் விக்கிரகத்தின் தத்துவத்தைப் பற்றியும், வழிபாட்டு முறைகளைப் பற்றியும் கூறும் வடமொழி நூலாகும்.

● மதுரை மீனாட்சி அம்மையாரும், சொக்கேசரும் வீற்றிருக்கும் உட்கோவில்களைத் தவிர அவைகட்கு புறம்பாயுள்ளபெரும்பாலான மண்டபங்கள், பிரகாரங்கள், மதில்கள், கோபுரங்கள், முதலியவைகள் சுமார் 400 வருஷங்களுக்கு முன் நாயக்கர்கள் ஆட்சிக் காலத்தில் கட்டப்பட்டவையாகும்.

● மனிதனால் காற்றும், நீரும் இன்றி உயிர்வாழ முடியாது. இருந்தாலும் உடலைப் போஷிப்பது உணவே. அதனால்தான் உணவே உயிர் என்று நம் முன்னோர்கள் கூறியுள்ளனர்.

● நமது முன்னோர்கள் இட்லி கண்டுபிடித்தது மிகப் பெரிய பெருமைப் படக்கூடிய உணவு ஆராய்ச்சி ஆகும். ஆவியில் வெந்தது. உடலுக்கு நல்லது. எளிதில் ஜீரணமாகிறது. இட்லியின் பெருமை தமிழர்களின் பெருமையாகும். இட்லி இந்தியாவின் மற்ற பகுதிகளிலும் பரவி வருகிறது.

● ஒரு நாளைக்கு மூன்று தடவைக்கு மேல் உண்ணத் தேவை இல்லை. ஆனால் நகரங்களில் சிலர் சதா எதையேனும் மென்று கொண்டே இருக்கிறார்கள். இந்தப் பழக்கம் மிகவும் கொடியது. ஜீரண உறுப்புக்களுக்கு ஓய்வு தேவை.

● மலச்சிக்கல், அஜீரணம், தூக்கமின்மை, அதிக வெப்பம் முதலிய நோய்கள் போதுமான அளவு தண்ணீர் குடிக்காததால் விளைவதாகும். தினசரி சாதாரணமாக எட்டு டம்ளர் தண்ணீர் குடிக்கும் பழக்கம் வேண்டும். அப்படிச் சாப்பிட்டால் இருக்கின்ற நோய் போய்விடும் என்பதல்ல. இனிமேல் நோய் வராது.

● தினசரி பகல் உணவு முடிந்ததும் வெற்றிலை பாக்கு போடுவது ஆரோக்யத்துக்குச் சிறந்தது. நாம் சாப்பிட்ட ஆகாரங்களில் உள்ள நச்சுப் பொருள்களை முறித்து இது ஜீரணத்தைப் பெருக்கும்.

● உலகத்திலேயே தமிழ் நாட்டில்தான் சொந்தத்தில் கல்யாணம் செய்து கொள்வது அதிகம் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. திருமணங்களில் நூற்றுக்குமுப்பது சதவிதம். மாமா மகள், அத்தை மகள், அக்கா மகள் என்ற நெருங்கிய முறையில் செய்து கொள்கிறார்கள். இதனால் பரம்பரை வியாதிகள் அதிகமாகின்றன என்று ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

● எல்லா நோய்களுக்கும் அடிப் படை மலச்சிக்கலாகும். தினசரி மலம் கழிக்காவிட்டால் எல்லா வியாதிகளும் உடலில் தோன்றும். திரிபலாப் பொடி, அல்லது நெல் லிப்பொடியை இரவில் தூங்குவ தற்கு முன்னால் பாலில் கலந்து குடித்துவர மலச்சிக்கல் நீங்கும்.

● பசுமையான நெல்லிப் பழங் களை தின்பதாலும், நெல்லிப் பழத்துண்டுகளால் ஈறுகளைத் தேய்ப்பதாலும் பயோரியா நீங் கும். பற்களிலுள்ள கிருமிகள் அழியும். நெல்லியில் 'ஸி' வைட்ட மின் ஏராளமாய் உள்ளதால் பற்கள் எலும்புகளுக்கு நல்லது. பல் நோய்கள் நீங்கும்.

● மிளகாய் காரத்திற்காக மட் டும் உபயோகிக்கப்படும் பொருள் அன்று. மிளகாய் விதையில் தாமிரசத்து உள்ளது. தாமிரச் சத்து உடலை வலுப்படுத்தும் பல வியாதிகளையும், நம் உடலில் பர வும் வேண்டாத பூச்சிகளையும் கொல்லும். ஆனால் பச்சை மிளகாய் உடலுக்கு நன்மை பயக்காது.

● எந்த வியாதி வந்தாலும், எந்தக் கஷ்டம் வந்தாலும் எந்தச் சிக்கல் ஏற்பட்டாலும் ஒரு டாக் டரையோ, ஒரு மனிதரையோ தஞ்சம் என்று அடையாது, எல் லாம் வல்ல இறைவனையே. தஞ் சம் எனப்பற்றி உறுதியாக நின்று உயர்பயன்பெற நம் மனத்தை நாம் பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும்.

● மூவாயிரம் ஆண்டுகளாகவே இலங்கை பர்மா, நேபாளத்தி லிருந்தும், இந்தியாவெங்கு மிருந் தும் பல்லாயிரவர் காசியில் சாத் திரங்களையும் வேதங்களையும் புராணங்களையும் சமஸ்கிருதத் தையும் பயின்றிருக்கின்றனர்.

● விளம்பரங்களும், வியா பாரப் பேச்சுகளும் எளிய வார்த் தைகளின் அழகுடன் மிளிரவேண் டும். அப்போதுதான் அது மக்கள் மனக்கைக் கவரும். மனத்தில் பளிச்சென்று நிற்கும். வியாபாரம் நன்கு செழித்து வளரும்.

● துன்பப்பட்டு வாடுகிறவர்க ளுக்கு நாம் கருணையோடு உதவ வேண்டும். அவர்களின் துன் பத்தை நீக்க முயற்சிக்க வேண் டும். நாம் பிற உயிர்களிடம் கருணை செய்தால் கடவுள் நம் மிடம் கருணை செய்வார். கருணை யால் கருணையைப் பெறலாம்.

● ஒவ்வொரு மாதமும் வளர் பிறை. தேய்பிறை இவ்விரண்டு காலங்களிலும் வரும் திரயோதசி திதியில் சூரியன் மறைவதற்கு முன் உள்ள 3½ நாழிகையும் சூரி யன் மறைந்தபின் உள்ள 3½ நாழிகையும் சேர்ந்த காலம் பிற்பகல் 4½ மணிமுதல் 7 மணி வரையில் உள்ள காலம்) பிர தோஷ காலமாகும்.

● பூஜையின் பொருட்டு கட வுளை மூல மந்திரத்தைச் சொல்லி வரவழைத்து அபிமுகமாகச் செய் தல் ஆவாஹனமாகும்.

# ஆலய நிர்வாகப்பணி

## வடபழநி ஆண்டவர் கோயில்

அருள் ராமநாதன்



திருமதி ஞானம் பிணுகபாணி

இந்துதர்மத்தின் உயர்ந்த நோக்கங்களையும், நாட்டிலே நடைபெறுகிற ஆலயநிர்மாணப் பணி தொடர்பான விவரங்களைத் தமிழகத்திலுள்ள வாசகர்களுக்கு அறிமுகப்படுத்தி வந்திருக்கிறோம். தமிழகத்திலுள்ள ஆலயங்களைப் பற்றிய விவரங்களையும், அவைகள் நிர்வகிப்படுகிற முறைகள் பற்றியும் வாசகர்கள் மட்டுமல்லாது பொதுவாக ஆலய நிர்வாகிகளுக்கு பிறருடைய நிர்வாகத்தின் அனுபவங்களைப் பற்றி அறிந்து கொள்ளும்பொருட்டு அருள் தன்னுடைய பணிகளில் ஒன்றாகக் கருதி முதற்கண்ணாக தமிழகத்தில் சமீபத்தில் நல்முறையில் நிர்வகிக்கப்பட்டு வருகிற வடபழநியாண்டவர் திருக்கோயிலைப் பற்றியும் அதன் அறங்காவலர் குழுத்தலைவர் திருமதி ஞானம் பிணுகபாணி அவர்களை அருள் பேட்டி கண்டு அவர்கள் இத்தனை நாட்கள்வரை செய்திருக்கிற மாற்றங்கள் பற்றியும், திருப்பணிகளைப் பற்றியும், இனிச் செய்ய எண்ணியிருக்கிற திருப்பணிகள் பற்றியும் அவர்கள் கூறியவற்றை வாசகர்களுக்கு பெருமையுடன் அறிமுகப்படுத்துகிறோம்.

இதில் ஒரு முக்கியத்துவம் என்னவென்றால் அருள் துவங்கியுள்ள இத்தெய்வத் திருப்பணியில் தாய்மை ஸ்தானத்தில் உள்ள ஒருவரை முதல் தடவை அறிமுகப்படுத்துவதுதான்.

நமது நாட்டில் இன்றைய நிர்வாகம் ஒரு வீரப்பெண்மணியின் கையில் இருக்கிறது. திருமதி இந்திராகாந்தி அவர்கள்பாரதத்தின் பிரதமராக மிகத் திறமையோடு ஆட்சிநடத்திவருகிறார்கள். பெண்

இனம் அன்பர்களுக்குச் சரிநிகராக ஒவ்வொரு துறையிலும் போட்டி போட்டுக்கொண்டு பங்கேற்று வருவது மிகவும் பாராட்டிற்குரிய செயல் ஒன்றாகும். பெண்கள் தங்களுக்கே உரிய தாய்மை ஸ்தானத்தோடு மிகநன்முறையில் அன்போடும் அக்கறையோடும் கண்டிப்போடும் மிகத்திறமையான நிர்வாகத்தை நடத்திவருவதற்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறார் வடபழநி ஆண்டவர் திருக்கோயில் அறங்காவலர் குழுத் தலைவர் திருமதி ஞானம் பினாகபாணி அவர்கள்.

தமிழகத்தின் தலைநகரம் சென்னையம்பதியில் வடபழநியாண்டவர் கோயில் தோன்றி 100 ஆண்டுகளுக்குமேல் ஆகிவிட்டது திருமுருகன் தலங்களுள் தொன்மை வாய்ந்த தென்பழநியில்பழநியாண்டியாகவும்சென்னை வடபழநியில் வேண்டுவோர்க்கு வேண்டும் வரமளித்துக்கொண்டு கலியுக வரதனைக் காட்சி அளிப்பவர் முருகப்பெருமான் ஆவார். இத்திருமுருகனுக்கு வைகாசியில் விசாகப்பெருவிழா, கந்தர் சஷ்டி பெருவிழா பங்குனி உத்தரப் பெருவிழா, முதலிய முக்கிய விழாக்கள் எடுத்துக்கொண்டாடப்பட்டு வருகிறது. கிருத்திகைத் திருநாளுக்கும், மற்றும் விசேஷ கிருத்திகைக்கும் பெருவாரியான பக்தர்கள் முருகப்பெருமானை தரிசித்து பரவசம் அடைந்து வருகிறார்கள். அபிஷேக அலங்காரப் பிரியரான முருகப்பெருமானுக்கு நித்தம் நித்தம் சந்தனக்காப்பு, விபூதி பஞ்சாமிர்த அபிஷேகம், பால்அபிஷேகம்முதலியவை செய்யப்பட்டு பக்தர்கள் கண்குளிரக் கண்டு வருகிறார்கள்.

சாதாரணமாக எழுந்தருளிய இந்த ஆலயம் பொதுமக்களின் ஒத்துழைப்புடன் மிகப்பிரும்மாண்டமான ஒரு திருக்கோயிலாக வளர்கிறது. இத்திருக்கோயில் திருப்பணிகள்-தொட்டதெல்லாம் துலங்கும் அங்கையர் கண்ணியின் அருட்செல்வர் தமிழ்வேள் திரு பி டி. ராஜன் அவர்கள் பொறுப்பேற்று ஏறக்குறைய 5½ லெட்சம் ரூபாய்க்கு திருப்பணியின் ஒரு பகுதி முடிக்கப்பட்டு 26.1.72-ல் கும்பாபிஷேகம் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

திருப்பணிகள் முடிவுபெற்ற சமயத்தில்தான் அறங்காவலர் குழுத்தலைவராக திருமதி ஞானம் பினாகபாணி அம்மையார்பொறுப்பேற்றுக்கொண்டார்கள். இந்தக் காலத்தில் சக அறங்காவலர் களுடைய பூரணஒத்துழைப்புடன் ஆர்வமிக்க உணர்ச்சியோடும் மிகப்பிரம்மாண்டமான மாற்றங்களை ஏற்படுத்தி திருக்கோயில் வருமானத்தையும் அதிகரித்திருக்கிறார்கள். பொதுவாக மாற்றங்களைப் புகுத்தும்போது குறிப்பிட்ட பகுதியிலிருந்து சிற்சில சலசலப்புகளை இவர் சந்திக்கவேண்டியிருந்தபோதிலும் சற்றும் மனம் தளர்வில்லாமல் எண்ணிய மாற்றங்களை மிகத் துணிவோடு புகுத்தியுள்ளது இவர்களது மாபெரும் சாதனையாகும்.

முருகப்பெருமானை தரிசிக்க வருகிற பக்தர்கூட்டங்களைஒழுங்கான முறையில் முருகப்பெருமானை தரிசிக்கவேண்டிய வசதிகளை தனிக் கட்டணம் செலுத்துவதன் மூலம் செய்துகொடுத்து இக்கோயிலுக்கு கூடுதல் வருமானமாக மாதம் பத்தாயிரம் ரூபாய் அதிகரிக்க டிக்கெட் விற்பனை மூலம் ஏற்பாடு செய்திருப்பது பொருள்படைத்ததாகும்.

சென்ற ஆண்டு இக்கோயிலின் வருமானம் சுமார் 4½ லெட்சம் ரூபாயை எட்டியுள்ளது. கடந்த ஐந்து ஆண்டுகளுக்கு முன்புஉள்ள வருமானத்தைப்போல் இது பன்மடங்கு அதிகமாகும்.

இது மட்டுமல்லாது பண்டைக் காலத்திலிருந்து வந்த சில பழக்க வழக்கங்களை இவ்விஞ்ஞான காலத்துக்கு ஏற்றவகையில் மாற்றம் செய்துள்ளவைகளை சற்று கூர்ந்து கவனிக்க வேண்டிய ஒன்றாகும்.

குறிப்பாக இதுவரை கற்பூர தீபம் காட்டிவந்ததை குறைத்து தமிழ் வருடப்பிறப்பு முதல் அதற்கு பதிலாக நெய்தீபம் காட்டுவதற்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

இம்மாற்றம் சற்றுவேறுபாடாக நமக்குத்தோன்றினாலும் இம்மாற்றத்திற்கான காரணங்களை அவர்கள் கூறியது சற்று சிந்தனைக்குரிய தொன்றுதான். கற்பூர தீபம் காட்டுவதன்மூலம் கர்ப்பக்கிருகத்திலுள்ள குருக்கள் உடல்நிலை மிகவும் பாதிக்கப்படுவது மட்டுமல்லாது மூலவருக்கு பக்திசிரத்தையோடு செய்யப்பட்ட அலங்காரங்கள் ஒருவித புகை சூழ்ந்த ஒரு தோற்றத்தை ஏற்படுத்தி விடுகிறது. இதனை எண்ணியும், ஆகம விதிகளில் தாடதீபத்தை மட்டுமே குறிப்பிடுகின்ற காரணத்தினாலும் இம்மாற்றத்தை செய்திருப்பதாக அவர்கள் சொன்னது நியாயமாகவே தோன்றியது. எந்த ஒரு மாற்றத்தை ஏற்படுத்துகிறபோதும் நடமாடும் தெய்வமான காஞ்சி பெரியவாளை தரிசித்து அவர்கள் அனுக்கிரஹம் பெற்றுத்தான் செய்கிறார்கள் என்பதை அறியும்போது நமக்கு உடல் சிலிர்க்கிறது.

கோவில் மிகவும் சுத்தமாக இருக்கவேண்டும் என்பதில் அம்மையார் அவர்கள் அதிக அளவு ஈடுபாடுகொண்டிருப்பது போற்றுதற்குரிய செயலாகும். தூய்மை கடவுளுக்கு அடுத்தபடி என்கிற காரணத்தினாலும் இந்த விஷயத்தில் அதிக அக்கறை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். கோவிலுக்கு வருகின்றவர்கள் சிற்சில சமயங்களில் தவிர்க்க முடியாத நிலையில் பொழுதுபோக்கு இடமாகவும் கருதிவிடுவதுண்டு அவ்வாறு வருகிறவர்கள் கேளிக்கைப் பொருள்களை தங்களோடு கொண்டுவருவதும் உண்டு. இவ்விஷயத்தில் சற்று கடுமையோடு அம்மாதிரியான நிலைகள் ஏற்படாமல் தவிர்த்ததோடு மட்டுமல்லா

மல் ஒரு புதுமையான முறையும் புகுத்த எண்ணியுள்ளார்கள். கோவிலுக்கு வருகிறவர்கள் நுழைவுக் கட்டணமாக ஒரு தொகையைச் செலுத்துவதன் மூலம் கோவில் வருமானத்தை ஒருபுறம் பெருக்குவதோடும் மறுபுறம் ஒழுங்குமுறையும் ஒரே சமயத்தில் ஏற்படுத்த எண்ணிவருகிறார்கள்.

இந்தக் கோயிலில் வேலைபார்க்கிற அர்ச்சகர்களுக்கு 15 விதிமுறைகள் புகுத்தியது விசேஷமான அம்சமாகும்: அதில் சில முக்கிய விதிகளாவன.

1 ஆலயத்திற்குள் ஆண்டவன் நாமத்தை தவிர பிற வம்புகள் பேசவோ சண்டை போடவோ கூடாது. 2. அரசியலில் கலக்கவோ அதைப் பற்றிப் பேசவோ கூடாது. 3 பக்தர்களுக்குப் பாரபட்சமின்றி பிறர் குறைகூறுவண்ணம் கடமையைச் செய்ய வேண்டும். 4 அரசு கட்டளையிட்டுள்ளபடி ஆண்டவனுக்குத் தமிழில் அர்ச்சனை செய்ய வேண்டும். தமிழ்ப்பாடல்கள் பாடவேண்டும் 5 வடபழநியாண்டவர்கோவிலைச் சேர்ந்த குருக்கள் என்பதற்கு அடையாளமாக எல்லா அர்ச்சகர்களும் குடுமிவைத்து கழுத்தில் உத்திராட்சம் அணிய வேண்டும். 6 அவரவர்களுக்கென்று முறைப்படி வரும் சன்னதியை விட்டு மற்றவர்கள் இடத்திற்குச்சென்று கோவில் நிர்வாகத்தைக் குலைக்கக் கூடாது.

இந்தவிதிமுறைகளை மிகவும் கண்டிப்பான முறையில் கடைப்பிடித்துவருவதை கண்காணிப்பதோடு மட்டுமல்லாமல் இந்த விதிமுறைகளை மீறியவர்களையும் தயவுதாட்சண்யம் பாராமல் தண்டனைக்கு ஆளாக்குவதைப் பார்க்கின்றபோது அம்மையாரை நாம் மனதாரப் பாராட்டுகிறோம். இந்தச் சிறந்த அம்சத்தை தமிழகத்திலுள்ள ஏனைய கோவில்களும் பின்பற்றவேண்டியது பயன் உள்ள செயலாகும்.

குறிப்பிட்ட சன்னதியில் குறிப்பிட்ட அர்ச்சகர்களே மட்டும் இருந்து விடாமல் வரையான மாற்றங்களோடு ஒவ்வொரு சன்னதிக்கும் சுற்றுமுறையில் அர்ச்சகர்கள் நியமிக்கப் படுவதால் எல்லாருக்கும் சமபயன்ஏற்படுவதற்கானவாய்ப்பை ஏற்படுத்தி அர்ச்சகர்கள் நல்வாழ்விற்கு உதவியிருப்பது பாராட்டுக்குரிய ஒன்றாகும்.

தரிசிக்க வருகிற பக்தகோடிகள் நிர்வாகமுறையில் அன்றாடம் ஏதாவது குறை ஏற்பட்டுவிட்டதென்று குறைகூறினால் அக்குறைகளை ஆராய்ந்தறிந்து அதற்குக் காரணமானவர்களை உடனுக்குடன் தண்டித்து வருவது சிறந்த மிக அதிசயிக்கத்தக்க நிர்வாக அம்சமாகும்.

அர்ச்சகர்களிடமும், அலுவலக ஊழியர்களிடமும் இவ்வளவு கண்டிப்பாக வேலை வாங்கும் அம்மையார் அதே நேரத்தில் அவர்களுக்கு எந்தக் குறையும் ஏற்படா வண்ணம் பார்த்துக் கொள்கிறார்

கள். இதனால் ஊழியர்களிடமும் நன்மதிப்பைப் பெற்று அவர் களாலும் பாராட்டப்படுகிறார் கள்.

முதன்முறையாக இந்தத் தேவஸ்தானத்தில் ஆண்டவர் படம்போட்டுகாலண்டர்போட்டு பொதுமக்கள் பயனடையக்கூடிய முறையை இவர் துவங்கி உள் ளார். தன்னுடைய சக அறங் காவலர்கள் ஒத்துழைப்போடு இவர்கள் ஆற்ற எண்ணியுள்ள பணிகள் ஏராளம். முதலாவதாக இத்திருக்கோவில் ஏற்படக் காரணமாக இருந்த சுமார் நூறு வருடங்களுக்கு முன்பு வாழ்ந்த திரு. அண்ணாசாமிநாயக்கர் அவர் களுக்கும், 50 வருடங்களுக்கு முன்பு வாழ்ந்த திரு. ரெத்தின-சாமி செட்டியாருக்கும் 40 வரு டங்களுக்கு முன்பு வாழ்ந்த திரு. பாக்கியலிங்கத் தம்பிரான் அவர்களுக்கும் கட்டிஉள்ள சமா தியைப் புதுப்பித்து மேலே தள வரிசை (காங்கிரீட்) போட்டு, சமாதியின் முன்புறம் நந்தவனம் ஏற்படுத்தி சுற்றிலும் மதில்சுவர் கட்டவேண்டிய முயற்சியில் ஈடு பட்டுள்ளார்கள்.

விலைக்கு வாங்கிச் சாற்றும் ஒரு கூடைப் புஷ்பத்தைக் காட்டிலும் நம் தோட்டத்துப் புஷ்பம் ஒன்-றைச்சாற்றினாலும் அதுவே ஆண் டவனுக்கு ஏற்றது என்ற பண் டைக் கொள்கையைக் கொண்ட வர் குழுத்தலைவர்.

ஆலய அலுவலர்களுக்கு வாடகை குடியிருப்பு கட்டுதல், கோயிலின் கிழக்குப் புறத்திலும் மேற்குப் புறத்திலும், வடக்குப் புறத்திலும் சிறிய கோபுரங்கள் கட்டுவதும், ஆவண அறை கட்டு தலும் பிரகார மண்டபம் கட்டுவ தற்கு ஏற்பாடு செய்தல் இவை களின் உத்தேச மதிப்பீடு ஏறக் குறைய 25 லெட்சரூபாய் ஆகும். இந்தத் தொகையை இவர்கள் சொன்னபோது நமக்குச் சற்று மலைப்பு ஏற்பட்டாலும் மிகுந்த தன்னம்பிக்கையோடு முருகபக் தர்கள் திருப்பணியை முடிப்பதற் கான பொருளுதவியைச் செய்ய முன்வந்துள்ளதை அடுக்கடுக்காக் குழுத்தலைவர் அம்மையார் அவர் கள் சொன்னபோது நாம் அப்ப டியே திகைத்து நிற்கிறோம். தற் சமயம் திரு. சின்னப்பதேவர் அவர்கள் வடபழநியாண்டவருக் குச் செய்யவிருக்கும் விலையுயர்ந்த கிரீடம் கவசத்தைப் பற்றியும் குறிப்பிட்டார்கள்.

பழநியாண்டவர் ஆண்டியாக இருந்தாலும் அறங்காவலர் குழுத் தலைவர் தாய்மை ஸ்தானத்தில் இருப்பதால் ஆண்டவனுக்கு நிறைய அலங்காரம் செய்து பார்க்க அளவு கடந்த விருப்பம் கொண்டுள்ளார்கள். பெண்கள் கோவிலுக்கு நிறைய வருவதால் அம்மனுக்கு விசேஷ முறையில் மஞ்சள் குங்கும அலங்காரம் செய்து பார்க்க விரும்பும் அம்மை யார் அவர்களின் ஆசை நியாய மானதாகும். வரவேற்கப்பட வேண்டிய ஒன்றுமாகும்.

திருமதி ஞானம் பினகபாணி அம்மையாரின் பேராவல் இத் திருக்கோவில் தமிழகத்தில் நன்

முறையில் நிர்வகிக்கப்பட்டு வருகிற கோவில்களில் ஒன்றாகவும் தாய்மைக்கான சுழற்கோப்பையை தொடர்ந்து பெறவேண்டும் என்பதுமாகும்.

காலை திருப்பள்ளி எழுச்சியும் இரவு தாலாட்டுப் பாடி திருமாங்கியம் செய்வதை ஒலிபரப்பி மூலம் திருப்பதி பெருமாள் சன்னதியில் நடைபெறுவதைப்போல ஒலிபரப்பி எல்லாரும் அப்புனித வாக்கியங்களைக்கேட்டுப் பயனடைய வேண்டிய முயற்சியில் ஈடுபட்டுள்ளார்கள். காலையிலும் மாலையிலும் தெய்வீக மணங் கமழும் பாடல்களையும் ஒலிபரப்ப விருப்பம் கொண்டுள்ளார்கள்.

ராஜகோபுரத்தில் வேல்வைக்க வேண்டும் என்ற இவரது ஆசை நிறைவேறியதாகவும் தற்சமயம் மின்வெட்டு காரணமாக இரவு ஒளி போடுவதில்லை என்றும் சொன்னார்கள். கிருத்திகை அன்று அர்ச்சனை டிக்கெட் மட்டும் சுமார் 5000 டிக்கெட்டுகள் விற்பனையாகின்றன என்ற தகவலையும் சொன்னார்கள். கோவிலின் வருட வருமானம் சுமார் 6 லெட்ச ரூபாய் என்றார்கள். ஆண்டவர் சன்னதியில் வருடத்திற்கு கோவில் செலவில் 10 ஏழைகள் திருமணம் நடத்தி வைக்கிறோம் என்ற தகவலும் நமக்குச் சொன்னார்கள். விளக்கு பூஜை அதாவது 108 விளக்கு பூஜை செய்ய விருப்பம் இருப்பதாகவும் கோவிலில் இட நெருக்கடி காரணமாக இந்த எண்ணம் தாமதமாகச் செயல்படவேண்டியிருக்கிறது என்பதையும் அம்மையார் குறிப்பிட்டார்கள்.

திருமதி ஞானம் பிறைசூடாணி அம்மையார் இந்த ஆலயத்தின் அறங்காவலர் குழுவில் இருக்கும் வரை அங்கு எந்தத் தவறும் நடக்காது—நடக்கவும்முடியாது என்ற நற்சான்றிதழை நமது தமிழக முதல்வர் அவர்களிடம் பெற்றவர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது.

இந்த ஆலயத்தின் அறங்காவலர்கள் கருத்துமாறுபாடு இல்லாமல் ஒருங்கிணைந்து செயல்பட்டு வருவது மிகவும் பெருமைப்படக்கூடிய காணக்கிடைக்காத காட்சியாகும். அலுவலகத்துக்குச் செல்லுவதுபோல அறங்காவலர் தலைவரும், சக அறங்காவலர்களும் வாரத்தில் மூன்று நான்கு தினங்கள் தவறாது வந்திருந்து இரவு 10 மணிவரை இருந்து விட்டுச் செல்வது எங்கும் காணக்கிடைக்காத காட்சியாகும்.

திருமதி ஞானம் பிறைசூடாணி அம்மையாரைப் போன்ற தாய்மை ஸ்தானத்தை வகிக்கும் ஆர்வமிக்கவர்கள் மற்ற கோவில்களுக்கும் அறங்காவலர் தலைவராக நியமிக்கப்பட்டு நல்ல பல காரியங்களை செயல்படுத்திக் கோவில் வருமானங்களை அதிகப்படுத்தியும் இன்னும் பல நல்ல செயல்கள் செய்வதற்குவாய்ப்பும் ஏற்படுமானால் இந்துக்களாகிய நாம் பேறு பல பெற்றவர்கள் ஆவோம். இந்த நல்ல ஆசையை நம் எண்ணத்தை வடபழநியாண்டவர் திருவடிகள் சமர்ப்பிக்கின்றோம். ●

# படைவீடு



ஸ்ரீ திருமுருக
கிருபானந்த வாரியார்
சுவாமிகள்

சேனைகளும் சேனாதிபதியும் தங்கியிருக்கின்ற இடத்திற்குப் படைவீடு என்று பேர். படைகள் தங்கும் வீடு ஆதலின் அப்பேர் பெற்றது.

விடு என்ற முதனிலை நீண்டு வீடு என்றாயிற்று. இது தொழிற் பெயர். விடுபடுவது வீடு. ஆன்மாக்கள் மும்மலக் கல்லில் இருவினைக் கயிற்றால் கட்டுண்டிருக்கின்றன. அக்கட்டினின்றும் விடுபடுவதே வீடு எனப்படும்.

முத்தி என்பது வடசொல். பந்தத்தினின்றும் விடுபடுவது முத்தி. சிப்பியினின்றும் விடுபடுவதனால் முத்து எனப் பேர் பெற்றது தரளம். பந்தத்தினின்றும் விடுதலையுற்றவன் ஜீவன் முத்தன்.

இந்த வீடுபேற்றைத் தருகின்றவன் முருகன். வீடுபேற்றுக்குத் தடையாக இருப்பவர் காம க்ரோத லோப மோக மத மாற்சரியங்கள் என்ற ஆறு பகைவர்கள். அப்பகைவர்களை அழிக்கின்ற ஞான வீரர் முருகன். கந்தன் என்ற சொல்லுக்குப் பகைவர்களுடைய ஆற்றலை வற்றச் செய்பவன் என்பது பொருள். 'சத்ரூன் சோஷயதீதி ஸ்கந்த.' என்பது நிகண்டு.

ஆகவே அகப்பகை புறப்பகை என்ற இரு பகைகளையும் அழிக்கின்ற வெற்றிவேல் வீரனாகிய விமலன் தங்கியிருக்கின்ற வீடு படை வீடு எனப் பேர் பெற்றது. இனி முருகன் எல்லாத் தேவர்களையும் தனக்குச் சேனையாக உடைய தேவ சேனாபதி. அப்பெருமான் தங்கியிருக்கின்ற தலங்களுள் மிக மிக முக்கியமான தலங்கள் ஆறு.

அவை திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன் குடி, திருவேரகம், குன்றுதோரு டல், பழமுதிர்சோலை.

ஆறுபடை வீடுகளையும் சேவித்து அறுமுகப் பெருமானு டைய ஆறெழுத்தை ஓதும் அடி யாரது அகக் கோயிலில் ஐயன் எப்போதும் வீற்றிருப்பன்.

"ஆறு திருப்பதிகண் டாறெ
முத்தும் அன்பினுடன்
கூறுமவர் சிந்தைகுடி கொண்
டோனே"

என்று கந்தர் கலிவெண்பா கூறு கின்றது.

இனி இந்த ஆறு படைவீடுகளை அருணகிரி நாதர் கந்தர் அந்தாதி யில் கூறுகின்றார். அப்பாடல் அடி யில் வருமாறு.

திருவாவி னன்குடி பங்களா
ரெண்முது சிருரைச
திருவாவி னன்குடி வானார்
பரங்குன்று சீரலைவாய்
திருவாவி னன்குடி யேரகங்
குன்றுதொருடல் சென்ற
திருவாவி னன்குடி கொண்ட
தண் கார்வரை செப்புமினே.

நமது உடம்பில் ஆறு ஆதாரங் கள் அமைந்திருக்கின்றன. மூலா தாரம், சுவாதிஷ்டானம், மணி பூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை எனப்படும்.

மூலாதாரம் - திருப்பரங் குன்றம், சுவாதிஷ்டானம் திருச் சீரலைவாய், மணிபூரகம் — திரு வாவினன்குடி, அநாகதம் - திரு வேரகம், விசுத்தி - குன்றுதோரு டல், ஆக்ஞை - பழமுதிர்சோலை

இந்த ஆறு ஆதாரங்களிலும் ஆறுமுகப்பெருமான் வீற்றிருக் கின்றான். அகமுகத்தினால் ஆறு படை வீடுகளில் ஆறுமுகனைத் தெரிசிக்கவேண்டும். அதற்கு அடையாளமாகப் புறக்கண்ணா லும் அன்பர்கள் கண்டு உய்வு பெறும் பொருட்டு அவன் ஆறு படை வீடுகளிலும் எழுந்தருளி யிருக்கின்றான்.

குன்றுதோருடல் என்பது எல்லா மலைகளும் சேர்ந்த ஒரு தொகுப்பு.

பழமுதிர்சோலை என்பது மது ரைக்கு வடகிழக்கே உள்ள அழ கர்கோயில் என வழங்கும் திருத் தலம்.

(1) தெய்வயானையை மணந்து உல்லாசமாக விளங்கும் தலம்; திருப்பரங்குன்றம்.

(2) சிந்தனையாகிய அலைகள் வந்து திருக்கோயிலில் மதிற் புறத்தே ஓய்ந்து கவலை தேய் கின்ற திருத்தலம் - நிராகுலம்- நிர் - ஆகுலம். ஆகுலம் - துன்பம் துன்பம் தீர்க்கின்ற இடம் - திருச் செந்தூர்.

(3) ஞான தண்டபாணியாகக் காட்சியளிக்கும் யோகத் தலம் - திருவாவினன்குடி.

(4) தந்தைக்கு இதமாக ஓம் என்பதன் உட்பொருளை உபதேசித்த தலம் திருவேரகம்.

(5) சல்லாபமாகக் குறிஞ்சி நிலமாகிய மலைகளில் விளையாடுகின்ற தலம் — குன்றுதோறாடல்.

(6) விநோதம் — பொழுது போக்காக ஞானப்பழம் உதிர்கின்ற சச்சிதானந்தச் சோலையாக விளங்குவது — பழமுதிர்சோலை.

"உல்லாச நிராகுலயோக இத
சல்லாப விநோதனு நீயலையோ."

என்று இந்த ஆறுபடை வீட்டினையும் குறிப்பாகக் கந்தரநுபூதியில் அருணகிரிநாத சுவாமிகள் கூறுகின்றார்.

ஆறுதலையின்றி அநேக பிறப்புக்களையெடுத்து அலைகின்ற ஆன்மாக்களாகிய நாம் ஆறுபடை வீடுகளையும் சென்று வணங்கி ஆறுதலையடைய அண்ணலின் தண்ணருளைப் பெற்று ஆறுதலை அடைவோமாக.

# ஞானம்

ஸ்ரீ ஆதிசங்கரர்

எப்படி ஒளியின் உதவியில்லாமல் ஒரு பொருள் ஒருபொழுதும் பார்க்கப்படுவதில்லையோ அப்படி மனதில் ஆராய்ச்சியில்லாமல் எதனாலும் ஞானம் அடையப் படுவதில்லை.

அஞ்ஞானத்தால் தோன்றிய அனைத்தும் ஞானம் உதித்தவுடன் மறைந்து போகின்றது.

கண்ணாடி போன்ற மனதானது பரிசுத்தமானால் அதில் ஞானம் தானே விளங்கும். ஆகையால் மனதைப் பரிசுத்தமாக்குவதில் கவனம் செலுத்த வேண்டும்.

தன்னாலோ பிறராலோ ஆத்மாவைக் கொள்ளவும் முடியாது, தள்ளவும் முடியாது; அதுவும் எதையும் கொள்ளுவதுமில்லை தள்ளுவதுமில்லை. இதுதான் உண்மையான ஞானம்.

வேதங்களிலும் தேவதைகளிடமும் உறையும் உன்னதமான ரகசியம் ஞானமே. அதுதான் பரிசுத்த மளிப்பவற்றுள் தலை சிறந்தது.

சிறந்ததும் ரகசியமானதுமான ஞானத்தைத் தன்னடக்கமில்லாதவனுக்கு அளிக்கக் கூடாது; வைராக்கியமுடையவனும் குருவின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடப்பவனுமான சீடனுக்குத் தான் அளிக்க வேண்டும்.

ஸமமானதும் சாந்தமானதும் ஸச்சிதானந்த வடிவினதுமான பிரம்மமே நான், அஸத்தான உடலல்லன் என்று இங்ஙனம் அறிவதுதான் ஞானம் என்று புத்திமான்களால் கூறப்படுகிறது.

நான் மாசற்றவன், அசைவற்றவன், அளவில்லாதவன், புனிதமானவன், அழிவற்றவன், சாவில்லாதவன், அஸத்தான உடலல்லன் என்று இங்ஙனம் அறிவது தான் ஞானம் என்று புத்திமான்களால் கூறப்படுகிறது.

நான் நேர்யற்றவன், எதிலும் பிடிபடாதவன், துவந்துவங்களுக் கப்பாற்பட்டவன், எங்கும் நிறைந்தவன், அஸத்தான உடலல்லன் என்று இங்ஙனம் அறிவது தான் ஞானம் என்று புத்திமான்களால் கூறப்படுகிறது.

நான் மாறுபடாதவன், எனக்கு உருவம் இல்லை, குற்றமும் குறையும் என்னிடமில்லை, நான் அஸத்தான உடலல்லன் என்று இங்ங

னம் அறிவதுதான் ஞானம் என்று புத்திமான்களால் கூறப்படுகிறது.

எனக்கு குணமும் இல்லை செயலுமில்லை; நான் என்றுமுள்ளவன், சுதந்திரமானவன், அழியாதவன்; நான் அஸத்தான உடலல்லன் என்று இங்ஙனம் அறிவதுதான் ஞானம் என்று புத்திமான்களால் கூறப்படுகிறது.

அந்தக்கரணம் உள்ளவரை வெளி விஷயங்கள் புலனுகின்றன; அந்தக்கரணமில்லையேல் வெளி விஷயங்கள் இல்லை. அறிபவன் அறிபவனுக எப்பொழுதும் (விஷயங்கள் இல்லாத பொழுதும்) இருக்கவே இருக்கிருன். துவைததிற்கு இருப்பில்லை.

தான் பரிசுத்தமான ஆத்மா என்று ஒருவன் உணரும்பொழுது தான் உடல் என்ற நினைவு அழிந்து போகிறது; ஒருவன் விரும்பாவிடினும் அந்த ஞானம் அவன் மனிதன் என்ற எண்ணத்திலிருந்து அவனை விடுவித்து விடுகிறது.

மற்ற சாதனங்களுடன் ஒப்பிட்டுப்பார்க்கையில் ஞானம் தான் மோக்ஷத்திற்கு நேரான சாதனம் என்பது தெளிவாகின்றது. நெருப்பில்லாமல் எப்படிச் சமையல் இயலாதோ அப்படி ஞானமில்லாமல் மோக்ஷம் இயலாது.

தேத்தாங்கொட்டைப் பொடியானது தண்ணீரைச் சுத்தமாக்கிவிட்டுக் கீழே படிந்து விடுவதுபோல் ஞானமானது அஞ்ஞானத்தால் அழுக்கடைந்த ஜீவனை அப்பியாசத்தால் அழுக்கற்றவனுக்கி விட்டுத் தன்னையும் மறைத்துக் கொள்ளுகிறது.

ஸம்ஸாரம் கனவு போன்றது, விருப்பு வெறுப்புக்கள் நிறைந்தது; அதனுடைய காலத்தில் அது உண்மைபோல் பிரகாசிக்கிறது; ஆனால் ஞான விழிப்பு ஏற்பட்டதும் மறைந்து போகிறது.

அரணிக் கட்டையைக் கடைவது போன்ற ஆத்ம தியானம் எப்பொழுதும் செய்யப்பட்டால் அதினின்று எழும் தீயானது அஞ்ஞானமாகிற விறகை முழுவதும் எரித்துவிடும்.

இருளில் ஏற்பட்ட திக்பிரமையானது ஒளியில் நீங்குவதுபோல் அஞ்ஞான நிலையில் ஏற்பட்ட அகங்காரம் மமகாரம் முதலியவையெல்லாம் தத்துவ ஸ்வரூப அனுபவத்தில் ஏற்படும் ஞானத்தால் உடனே அழிந்துபோம்.

தெளிந்த ஞானத்தையடைந்த யோகியானவன் ஞானக்கண்ணுல் தன்னிடத்திலேயே உலகனைத்தும் இருப்பதாயும் ஆத்மாவே அனைத்துமாயிருப்பதாயும் காண்கிருன்.

❋

● உலகில் கிடைக்கும் கஸ்தூரியில் 80 சதவிதம் திபெத்திலிருந்து வருகிறது. கஸ்தூரி மிகவும் நல்ல மருந்து. இதை முதலில் கண்டுபிடித்து எடுத்தவர் அராபியர். கஸ்தூரி மானின் பீஜகோசத்திலிருந்து எடுக்கப்படுகிறது.

2

# இறைவன்

இறைவனைக் காணமுடியாத காரணத்தால் இறைவனே இல்லை என்று பகராதே.

இறைவனுடைய திருநாமங்கள் பலவாகும். அவரை அணுகுபதற்கு வழிதரும் ரூபங்கள் அனந்தமானவை. அவரை நீ எந்த நாமம் கொண்டு, எந்த ரூபம் கொண்டுவழிபட்டாலும் அததன் மூலம் நீ அவரை அறிந்துணருவாய்.



ஸ்ரீ ராமகிருஷ்ண
பரமஹம்ஸர்

சத்பொருள் ஒன்றேயாம். யாண்டும் ஒருபோன்று இருப்பதேயாம். இருக்கும் பேதமெல்லாம் நாமரூப பேதமேயாகும். ஏரியொன்றிலே மூன்று நான்கு கட்டங்கள் உள்ளன. ஓரிடத்தில் நீர் பருகும் ஹிந்துக்கள் அதை 'ஜலம்' என்று குறிக்கின்றனர். வேறு இடத்தில் நீர் பருகும் முஸல்மான்கள் 'பானி' என்று அதனைக் குறிக்கின்றனர். மூன்ருவது இடமொன்றில் நீர் பருகும் இங்கிலீஷ்காரர் அதை 'வாட்டர்' என்று குறிக்கின்றனர். மூன்று சொற்களும் ஒரே யொரு பொருளையேதான் குறிக்கின்றன. உள்ள பேதமெல்லாம் பெயரளவிலே மட்டுமேதான்.

அதே போன்று, சத்பொருளை ஒரு சிலர் 'அல்லா' என அழைக்கின்றனர். வேறு சிலர் 'காட்' என்ற இங்கிலீஷ் சொல்லால் அழைக்கின்றனர். அவ்வாறே சிலர் 'பிரம்மம்' என்றும், சில

இரவு நேரத்திலே ஆகாயத்தில் நட்சத்திரங்கள் பலவற்றை நீ காண்கிருய். ஆனல் சூரியன் உதிக்கும் பொழுது நீ அவற்றைக்காண்பதில்லே. ஆகையினுலேயே பகற்பொழுதிலே வானத்திலே நட்சத்திரங்களே இல்லையென நீ சொல்லிவிடலாகுமா?

மானுடா, உன்னிடம் அஞ்ஞானம் இருக்கின்ற நாளிலே நீ

காளி என்றும், மற்றவர் இராமர், ஏசு, துர்க்கை, ஹரி, என்பன போன்ற பெயர்களாலும் அழைக்கின்றனர்.

கடவுள் இதுதான், இதைத் தவிர வேறு யாதுமில்லை என்று முடிவாக யாரும் கூறிவிட முடியாது. அவர் ரூபமற்றவர்தான்' ஆனால் ரூபங்களும் கொண்டவர் ஆவார். பக்தர் பொருட்டு அவர் ரூபங்களை ஏற்கின்றார். ஆனால் ஞானியர்க்கோ அவர் ரூபமற்றவராக இருக்கின்றார். இது எவ்வாறு நிகழ்கின்றது என்பதை நீ அறிவாயா?

சச்சிதானந்தப் பொருளாகின்ற பிரம்மம் கரை காணாத சமுத்திரம் போன்றது. தீவிரமான குளிர் காரணமாக, சமுத்திரத்திலே, இங்குமங்குமாகப் பார்வைக்குப் புலனாகும் பனிக்கட்டிகள் உருவாகின்றன. அது போன்று தன்னை ஆராதிப்பவர்களுடைய பக்தியாகிற குளிர்ச்சக்தி வயத்தால் அகண்ட வஸ்துவானது தன்னை எல்லைக்குட்பட்ட பொருளாக மாற்றி யமைத்துக் கொண்டு வழிபடும் பக்தர் முன்னே உருவக்கடவுளாகக் காட்சி தருகின்றது.

அதாவது ஒரு சரீரியான புருஷனாக இறைவன் தம்மைத் தம் பக்தருக்குத் தோற்றுவித்துக் கொள்ளுகின்றார். மேலும் சூரியன் உதித்தெழுந்தவுடன் சமுத்திரத்தில் உள்ள பனியானது உருகி நீர் ஆகிவிடுவது போன்று, ஞானம் உதித்தெழுந்தவுடன் சரீரியான இறைவன் மீண்டும் அகண்டமான அருபியான பிரம்மமாக உருகிப்போய் விடுகின்றார்.

அப்பொழுது கடவுள் ஒரு சரீரியான புருஷன் என்ற உணர்ச்சி மேலும் தொடர்ந்து இருப்பதில்லை. கடவுளுடைய ரூபங்களையும் அதன் பின்னர் காண்பது இல்லை. ஆனால் இதனைக் கருத்திற் கொள்ள வேண்டும்—ரூபமும் அரூபமும் ஒரே சத் பொருளையே சேர்ந்தனவாகும்.

ஒரு சமயம் ஒரு மனிதன் ஒரு காட்டினுள் சென்றான். அங்கு ஒரு மரத்தின்மீது அழகான ஒரு ஜந்துவைக் கண்டான். பின்னர் அவன் அதைப்பற்றி நண்பரொருவருக்குச் செய்தி தெரிவித்து, "சோதரரே, காட்டில் உள்ள மரமொன்றின்மீது சிவப்பு நிறமுள்ள ஜந்து ஒன்றை யான் கண்டேன்" என்றான்.

அந்த நண்பன் அதற்கு உத்தரமாக, "நானும் அதனைக் கண்டுள்ளேன். அதை ஏனோ சிவப்பு நிறமெனப் பகர்கின்றீர்? அது பச்சைநிறமாகவன்றோ உளது!" என மொழிந்தான். மூன்றாவது மனிதன் ஒருவன், "இல்லவே யில்லையே, அதைப் பச்சை என்று நீர் பகர்வது ஏனோ? அது மஞ்சள் நிறமாகவன்றோ உளது!" என்று சாதித்தான்.

பின்னர் வேறு மனிதர் சிலர் அந்தப் பிராணியைப் பலவித

மாக வெதா நிறமென்றும் நீல மென்றும் கரிய நிறமென்றும் வர்ணிக்கத் தொடங்கி விட்ட னர். விரைவிலே ஜந்துவின் நிறம் பற்றி அவர்களுக்கிடையே சண்டை சச்சரவு ஏற்பட்டுவிட் டது.

இறுதியாக அவர்கள் அந்த மரத்தண்டைசென்று அதனடியில் உட்கார்ந்திருந்த மனிதன் ஒருவ னைக் கண்டனர். அவர்கள் அவனை வினவினர். அவன் இவ்வாறு விடை கூறினன், "நான் இந்த மரத்தடியிலேயே வசித்து வரு கிறேன். அந்த ஜந்துவை நான் வெகு நன்ருக அறிவேன். அதைப் பற்றி நீங்கள் ஒவ்வொருவரும் கூறியதும் உண்மைதான்.

சில சமயங்களில் அது சிவப்பா கத்தான் உளது, சில சமயங்களில் பச்சையாக உளது, வேறு சமயங் களில் மஞ்சளாகவும் மற்றும் நீல மாகவும் இப்படியே வேறு வேறு நிறமாகவும் உளது. அது ஒரு பச் சோந்தி, இன்னெரு விசேஷம் யாதெனில் சிலவேளைகளில் அது எந்த நிறமுமே அற்றதாக இருப் பதையும் நான் காண்கின்றேன்.",

அதே போன்று இறைவனை சதாகாலமும் சிந்திப்பவனுக்கு அவருடைய ரூபங்களும் தோற் றங்களும் தெரியவரும். கடவுள் குணங்கள் கொண்டுமுளார், ஆனல் அத்துடன் குணங்கள் அற்றுமுளார். மரத்தடியிலேயே வாசம் செய்யும் மனிதனுக்கே பச்சோந்தி பல்வேறு நிறங்களில் தோற்றமளிக்கக் கூடும் என்பது தெரியும்.

மேலும் அந்தப் பிராணி சில வேளைகளில் நிறமே இல்லாதிருப் பதும் அவனுக்குத் தெரியும். முழு உண்மையையும் அறியாத மற்ற வர் தமக்கிடையே சச்சரவு இடுப வர்களாய் அல்லலுறுகின்றனர்.

கடவுள் அருபியாக உளார், ரூபம்கொண்டவராகவும் உளார். ரூப சகிதமும் ரூபரகிதமும் ஆன இரு நிலைகளுக்கும் அதீத மான ஒன்ருகவும் அவர் உளார், அவர் எதுவெல்லாமாக உளார் என்பதை அவரே அறிவார். பக வானிடத்து அன்பு கொள்ளு வோர் பொருட்டு அவர் பல் வேறு வகைகளில் பல்வேறு ரூபங்களில் தம்மைத் தோற்று வித்துக் கொள்ளுகின்ருர். தோற்றநிலை ரூபங்கள் பற்றியோ அவை இன்மை பற்றியோ எந்த வரைக்கும் வரம்புக்கும் அவர் உண்மையிலேயே கட்டுப்பட்ட வராகார். ●

● சபரிமலையை ஒரு டூரிஸ்ட் கேந்திரமாக அபிவிருத்தி செய்யும் திட்டத்தை மத்திய அரசின் அங்கீகாரத்துக்காக கேரள அரசு அனுப்பி வைத்திருக்கிறது. இந்தத் திட்டம் ரூபா 7 கோடி யில் இரண்டு ஆண்டுகளில் முடிக்க உத்தேசிக்கப்பட்டிருக் கிறது. குடில்கள் அமைப்பு, குடி தண்ணீர் சப்ளை ஆகியவை இத்திட்டத்தில் அடங்கியுள்ளன.

# ஆத்மா அழிவற்றது



மகாத்மா காந்திஜி

அப்போது காந்திஜி சிறையில் இருந்தார். அவரின் துணையார் கஸ்தூரிபா காந்தி போனிக்ஸ் ஆசிரமத்தில் நோயாகப் படுத்திருந்தார்.

திடீரென்று அவரின் நிலை மிகவும் கவலைக்கிடமாயிற்று. அப்போது அங்கிருந்த திரு வெஸ்ட் காந்திஜிக்குத் தந்தி அனுப்பினார். அதற்குப் பதிலாக காந்திஜி அன்னை கஸ்தூரி பாவுக்கு ஒரு கடிதம் எழுதினார். அச் சமயம் அவருக்கு வயது நாற்பது தானிருக்கும்.

"உன்னுடைய உடல் நிலை குறித்து திரு. வெஸ்டு தந்தி அனுப்பியுள்ளார். என் இதயம் மிகவும் வேதனைப் படுகிறது. நான் அழுதுகொண்டிருக்கிறேன். ஆனால் அங்கு வந்து உனக்கு சேவைசெய்யும் நிலைமையில் நான் இல்லையே!

சத்தியாக்கிரகப் போராட்டத்தில் நான் அனைத்தையும் அர்ப்பணம் செய்துவிட்டேன். என்னால் அங்கு வரக்கூட இயலாது. அபராதம் கொடுத்தால்தான் வரலாம். ஆனால் அபராதம் கொடுத்து வெளிவரமாட்டேன் நீ தைரியத்துடன் இருந்து, நன்றாகச் சாப்பிட்டு வந்தால் குணமாகி விடுவாய் இதற்குமப்பால் ஒருவேளை நீ என்னைப்பிரிந்துசென்றுவிடுவாய் என்பது தான் என் விதியானால்: 'பிரிவைச் சகித்துக்கொண்டும் நான் உயிருடனிருக்கும்போதே நீ மரித்துவிடுவது தீமையல்ல' என்று மட்டுமே குறிப்பிட விரும்புகிறேன்.

உன்னிடம் எனக்கு அளவு கடந்த அன்புஇருக்கிறது. எனவே மரணத்திற்குப் பிறகும், என்னைப் பொறுத்தவரை, நீ உயிர் வாழ்ந்துகொண்டுதான் இருப்பாய். உன் ஆத்மா அழிவற்றது

நீ என்னைப் பிரியத்தான் நேரிடு மென்றால், உனக்குப் பிறகு நான் மறுமணம் செய்து கொள்ளமாட்டேன் என்று உறுதி கூறுகிறேன்.

முன்பே ஒரு சமயம் இதைப் பற்றி நான் உன்னிடம் கூறியிருக்கிறேன். நீ இறைவனிடம் நம்பிக்கை வைத்து உயிரை விட வேண்டும். நீ மரணமடைந்தால், அது கூட சத்தியாக்கிரகத்திற்கு ஒளி ஊட்டுவதாகும். என் போராட்டம் வெறும் அரசியல் போராட்டமல்ல, அது அறவழிப் பட்டதுமாகும்; எனவே மிகுந்த தூய்மையுடையது. இதில் இறந்தால் என்ன, உயிர் வாழ்ந்தால் தான் என்ன? நீயும் இதையே நினைந்து கொஞ்சமும் துயரடையாமலிருப்பாய் என நம்புகிறேன். இத்தகைய பதிலையே நான் உன்னிடமிருந்து எதிர்பார்க்கிறேன்.

மேலே கூறிய நிகழ்ச்சி நடைபெற்று ஐந்து ஆண்டுகள் கழிந்து விட்டன. ஒரு நாள் காந்திஜி போனிக்ஸ் பண்ணையில் விவசாய வேலை செய்து கொண்டிருந்த போது, ஒரு தந்தி வந்தது. அதை அவர் படித்துவிட்டு, அதற்கு எந்த முக்கியத்துவமும் இல்லை என்பது போல, தம்மிடம் வைத்துக் கொண்டார். பகல் கழிந்தது. அவருடைய நண்பர்களுக்கும் கூட செய்தி என்னவென்று தெரியவில்லை. இரவுப் பிரார்த்தனைக்குப் பிறகு மிக முக்கியமான செய்திகளைப்பற்றி சர்ச்சை நடைபெற இருந்தது.

அப்போது மிகவும் கம்பீரமாக, உள்ளத்தைத் தொடும் முறையில் அவர் சொன்னார். “எனக்குப் பெரிய விபத்து ஏற்பட்டுள்ளது, நேற்று என் தமையனார் காலமாகிவிட்டார். கடைசி நேரம் வரை அவருக்கு என்னைப் பற்றியே கவலை இருந்து வந்தது என்பதை நானறிவேன். என்னைச் சந்திக்கவேண்டும் என்று பெருத்த ஆவல் கொண்டிருந்தார். நானும் இதற்காகவே என்னுடைய வேலைகளையெல்லாம் சீக்கிரம் முடித்துவிட்டு இந்தியாவுக்குப் புறப்பட விரும்பினேன். அங்கு சென்று அவர் பாதங்களை வணங்கி அவருக்குப் பணிவிடை புரிய வேண்டும் என்று துடித்தேன். ஆனால் நடந்ததோ முற்றிலும் வேறு விதமானது.”

இந்நிகழ்ச்சி குறித்து அவர் தம்முடைய நண்பர் ஒருவருக்கு எழுதினார்: “இத்தகைய அதிர்ச்சி தரும் சம்பவங்களிலிருந்து மனிதனுக்கு மரணம் குறித்து அதிக அச்சமின்மை ஏற்படுகிறது. இந் நிகழ்ச்சியினால் என் மனத்தில் இத்தனை கலவரம் ஏன் ஏற்பட வேண்டும்?

இத்தகைய துன்பத்தில் தன்னலம் அடங்கியுள்ளது. நான் சாவதற்குத் தயாராக இருந்தால்—சாவு வரவேற்கப்பட வேண்டியது தான் என்றால்—என் சகோதரரின் மரணத்தினால் எந்த ஆபத்துமில்லை. மரணத்தைக் குறித்து நமக்கு அச்சம் இருக்கிறது.

அதனால் மற்றவர்கள் மரணத்தைக் கண்டு நாம் அழுகிறோம். உடல் அழியக் கூடியது. ஆத்மா அழிவற்றது. அது பிரிந்து செல்வதனால் நாம் ஏன் கவலைப்பட வேண்டும்? ஆனால் இந்த அருமையான ஆறுதலளிக்கும் சிந்தாந்தத்தில் உண்மையான நம்பிக்கையிருந்தால் தான் இந்த நிலையை அடைய முடியும்."

(மதுரை தமிழ்நாடு காந்தி நினைவு நிதிவெளியிட்ட இராமன் என் காவலன் என்ற புத்தகத்திலிருந்து)

—நன்றி

● நவரத்தினங்களில் ஒன்றான நீலம் அதிகமாகக் கிடைக்குமிடம் இலங்கைதான். நம் நாட்டில் காஷ்மீரத்திலும் ஓரளவு கிடைக்கிறது.

● பிரசங்கங்களினால் நாட்டில் பிரச்னைகளைத் தீர்க்க முடியும் என்று நினைப்பது, மோட்டார் ஹாரனை சப்தப்படுத்துவதால் வண்டி நெருக்கடியைத் தீர்த்து விடலாம் என்று நினைப்பது போலாகும்.

● ஆன்மநேயம், ஒருமைப் பாடு, இறைப் பற்று, கடமை உணர்வு முதலியன வேதத்தின் செழும் பொருளாகும். வைஷ்ணவர்கள் வேதச் செழுஞ் பொருளாய்த் திருமாலையும் கூறுவார்கள்.

● பகல் உணவைவிட இரவு உணவு குறைவாகவும், எளிய வகையாகவும் இருக்க வேண்டும். நல்ல உணவு, நல்ல சிந்தனை, நல்லவர்களின் நட்பு என்றும் உடல் நலத்தைத் தருவதாகும்.

● காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயிலில் ஒற்றை மாமரம் ஒன்று இருக்கிறது. இதனை வேத மாமரம் என்று சொல்வர். சுமார் 3500 ஆண்டு காலமாக இருந்து வருகிறது. நான்கு வேதங்களை நான்கு கிளைகளாகக் கொண்ட அத் தெய்விக மாமரம் இனிப்பு, புளிப்பு, துவர்ப்பு, கார்ப்பு ஆகிய நால்வகைச் சுவைகளைக் கொண்ட கனிகளைத் தருகிறது.

● புள்ளிருக்கு வேளூர் என்ற வைத்தீஸ்வரன் கோயில் தலத்தில் எழுந்தருளி இருக்கும் இறைவர் திருநாமம் ஸ்ரீ வைத்திய நாதர். அம்மையார் திருநாமம் ஸ்ரீ தையல்நாயகி. முருகப் பெருமான் திருநாமம் ஸ்ரீ செல்வமுத்துக் குமாரர்.

● ஆதிசங்கரர் ஒரு சமயத்தில் காசநோயால் துன்புற்று, பிற முயற்சி ஒன்றினாலும் அது நீங்காமையால் திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் முருகப்பிரான் மீது "புஜங்கம்" என்ற பாவினால் தோத்திரம் பாடித் தம் நோய் நீங்கப் பெற்றார். அதுவே ஸ்ரீ சுப்ரமணிய புஜங்கம் என்ற வடமொழிப் பிரபந்தம் ஆகும்.

● ஒருவர் தம்முடைய கால்களுக்குக் கீழே உள்ள மண் புழுதியைக் காட்டிலும் தாம் தாழ்ந்தவர் என்று எண்ணும் போதுதான் கடவுள் துணைபுரிகிறார். பலவீனர்களுக்கும் திக்கற்றவர்களுக்கும் தான் தெய்வம் அருள் புரிந்து துணைசெய்கிறது என்று காந்திஜி சொன்னார்.

● தீண்டாமை ஒழிப்பு, மது விலக்கு, கதர் அபிவிருத்தி ஆகிய முக்கிய பணிகளை திறம்பட நடத்துவதற்காக 1925ல் திருச்செங்கோட்டில் ராஜாஜி காந்தி பெயரால் ஒரு ஆசிரமம் நடத்தினார். ஆசிரமவாசிகளில் ஒருவராக ஒரு ஹரிஜன் வாலிபரையும் சேர்த்துக் கொண்டார்.

# பக்தியில் தோழமை

ஸ்ரீமதி சுசீலா சுந்தரவேலு

இறைவன் பால் நாம் வைக்கும் அன்பினை நான்கு விதங்களாகப் பிரித்து அமைந்திருக்கிறார்கள் நம் சான்றோர்கள்.

இறைவனைத் தாயாகப் பாவித்து தான் குழந்தை என்று எண்ணி நேசிப்பது ஒருமுறை. இறைவனைத் தன் தோழனாக வைத்து அவனிடம் அன்பு செலுத்துவது ஒருமுறை. இறைவனைத் தலைவனாக வைத்து தன்னைப் பெண்ணாக பாவித்து வழிபடுவது ஒருமுறை இறைவனை எஜமானனாக வைத்து தன்னை அடிமையாக எண்ணி வழிபடுவது ஒரு முறை.

நம் சிவனடியார் நால்வரில் திருஞான சம்பந்தர் இறைவனையும், இறைவியையும் பெற்ற தாய் தந்தையாக எண்ணி இறைவியிடம் ஞானப்பால் குடித்து அவர்களின் குழந்தையாக இருந்து ஞானப்பிள்ளை என்று சிறப்புப் பெயர் பெற்றவர்.

சுந்தரமூர்த்தி நாயனார் அவர்களோ ஆண்டவனை தன் உயிர்க்குயிரான தோழன், நண்பன் என்ற முறையில் பாவித்து அவனிடம் தன் குறைகளைக் கேட்டும் அவனால் தன் குடும்பச் சிக்கல்களை நீக்கியும், இறைவனிடம் கண்டித்துப்பேசி நண்பனாகவே எண்ணி வழிபட்டதால் வன்தொண்டர் என்ற சிறப்பு பெயர் பெற்றார்.

மாணிக்கவாசகரும், அப்பர் பெருமானும் தலைவன் தலைவியாகவும், ஆண்டாள் அடிமையாகவும் வழிபட்டார்கள். அதில் தோழமை நேசம் பூண்டு, நண்பனாக வைத்து தன் குறைகளைக் கூறி அதை நிவர்த்திக்கவேண்டி தன் உறுதியான திடமான, தீர்க்கமான அன்பில் உரிமையுடன் நெருங்கிப் பாடுகின்றார் சுந்தரர். (அவனாசி என்னும் திருத்தலத்தில் முதலையுண்ட குழந்தையை அழைக்கப் பாடுமிடத்தில்)
"புரைக்காடு சோலை புக்கொளியூர் அவினாசியே — கரைக்கால் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே என்று"

திருவோண காந்தன் தளி என்னும் திருக் கோயிலில் வாழும் பெருமானீரே, பிறை தங்குமாறு சேர்த்துக் கட்டியுள்ள, உமது சடைகளின் மேலும், ஒப்பற்ற அலைகள் தோன்றிப் புரளுமாறு

விசுகின்ற 'கங்கை, எனும் தேவி யோவெனில் உமது பக்கத்தில் எப்போதும் உள்ள உமாதேவியா ருக்கு அஞ்சி ஒரு நாளும் வாய் திறப்பதேயில்லை. உன் மூத்த மகன் விநாயகனோவெனில் வயிறு ஒன்றையே முதன்மையாக உடை யவன். இளையவன் அங்கையில் வேலுடைய முருகனோ வெனில் விளையாட்டுப் பிள்ளை. தேவியான உமையம்மையாரோவெனில் உம் மைத் தவிர்த்து அடியார்களை ஆளுவாரல்லர் (நீரோ அடியவர் குறை நோக்கி ஒன்றும் செய்ய மாட்டீர்) ஆதலால் உந்தன் குடிக்கு நாங்கள் அடிமை செய்ய முடியாதவர்களாக இருக்கின் ரோம்' என்று சிவனார் குடும் பத்தை மதிப்பாக மனம் புண் படாமல் கேலி செய்தும் அதே சமயம் அவரிடம் ஆணித்தர மாக "நீர் 'என் குறைகளைக் கவனிப்பதில்லை அதனால் நானும் உம்மை அடிமை செய்ய மாட்டேன்" என்று வெட்டு ஒன்று துண்டு இரண்டாக அடித் துக் கூறும் உரிமை வன்றொண் டரைத் தவிர வேறு யாருக்கு வரும்.

இறைவனை அன்றாட வாழ்க்கை யில் உடனிருப்பவனாக பெரிதும் பாவித்து, அளவளாவி, ஊடியும் உகந்தும், உரையாடியும் தன் நட் பினை இறைவன்பால் செலுத்திய வர், தன் அன்பால் இறைவனைக் கவர்ந்துதான் சொன்னபடியெல் லாம் இறைவனை ஆட்டி வைத் தவர், பித்தன், பேயன் என்று திட்டியே முதல் பாடலை ஆரம் பித்து வைத்தவரும் நம் ஆரூ டைய நம்பிகள் ஒருவரே. தீவிர மான நம்பிக்கையால், இறைவ னின் காட்சியும், அவனின் தோழ மையும், அவனது கருணையும் பெற்ற, ஒரு ஏழைச் சிறுவனின் கதையைபார்ப்போம். 'ஒரு ஊரில் ஏழை விதவைத் தாய்க்கு ஒரே ஒரு மகன் இருந்தான். அவன் பெயர் சின்னக் கோபாலன். அவன் தாயாரோ கண்ணன் மேல் தீராத பக்தி கொண்டவள். அவள் சிறிய கண்ணன் பதுமை ஒன்றை தன் குடிசையில் வைத்து, அனுதினமும், தவறாமல் அதற்கு நீராட்டி, பூஜை செய்த பின்னே, மற்ற வீட்டு வேலைகள் செய்யத் துவங்குவாள்.

சின்னக் கோபாலனும் தாயு டன், பூஜையில் கலந்து கொள் வான். அவன் உள்ளத்திலும் கண்ணன்பால், அன்பு பெருகலா யிற்று. சின்னக் கோபாலன தின சரி ஒரு காட்டைக் கடந்து, அதற் கப்பால் உள்ள ஊர் சென்றே, பள்ளியில் படித்து வந்தான்.

'அம்மா காட்டுவழியில் போக எனக்கு பயமாக இருக்கிறது. நீயும் துணைக்கு வா' என்று தாயா ரைத் தினமும், கோபாலன் தொந்திரவு செய்ய ஆரம்பித் தான். இரண்டொரு நாள் தாயார் அவனுக்கு, துணையாகப் போனாள். ஆனால் தொடர்ந்து அவளால் தன் வேலைகளை விட்டு விட்டு அவனுக்குத் துணைபோக முடியவில்லை. அதனால் திக்கற்ற

வர்களுக்கு. தெய்வமே துணை என்று "அப்பா கோபாலா நீ காட்டுவழி போகும் போது, இதோ தினம் நாம் பூஜை பண்ணும், உன் அண்ணன் பெரிய கோபாலன், காட்டினுள் ஆடு மேய்த்துக் கொண்டிருப்பான், அவனை "அண்ணா அண்ணா" என்று துணைக்கு கூப்பிட்டாயானால், அவன் உனக்கு தினம் துணைக்கு வருவான்" என்று சொல்லியனுப்பினாள்.

அது போலவே தினமும் காட்டினருகில் வந்ததும், கோபாலன் பயத்தினால் தாயார் கூறியபடி. கண்ணனை "அண்ணா அண்ணா துணைக்கு வாயேன் எனக்கு பயமா இருக்கிறது என்று" கூப்பிடுவான், ஏழை பங்காளனை, கருணைக் கடலான, கண்ணனும், தினம் ஆட்டிடையன் போல, கால்களில் கலீர், கலீர் என்று சதங்கை யொலிக்க, கையில் வேய்ங் குழலுடன் வந்து, கோபாலனை காட்டைத் தாண்டி, ஊரின் எல்லையில் விட்டு விடுவான்.

மாலையிலும் வீடு திரும்பும் போதும், இதே போல காட்டின் எல்லை வரை வந்து, வழியனுப்புவான். கோபாலனும் கண்ணனுடன் தூய்மையான தோழமை பூண்டு, தாயார் என்ன கொடுத்தாலும், அதை தன் அண்ணன் பெரிய கோபாலனுக்கும், கொண்டு வந்து கொடுத்து, அவன் உண்பதைப் பார்த்து, பரவசமடைவான்.

கோபாலன் படித்த பள்ளியில், உபாத்தியாயரின் பிறந்த நாள் வந்தது. அது சமயம், மாணுக்கர் எல்லாம், குருதக்ஷிணையாக, உபாத்தியாயருக்கு, தங்களால் முடிந்ததைக் கொண்டுவர வேண்டும், என்று முடிவாயிற்று. சின்னக் கோபாலனும், தன் தாயாரிடம் வந்து, விஷயத்தைச் சொல்லித் தனக்கு ஏதாவது ஒரு நல்ல பொருள் தரவேண்டும், இல்லாவிட்டால் சக மாணுக்கர்கள் எல்லாம், கேலி செய்வார்கள், என்று முறையிட்டு அழுதான்.

ஏழ்மை நிலையிலிருந்த, அந்தத் தாய்க்கோ, என்ன செய்வது என்று தெரியவில்லை, பிறகு தான் வணங்கும், கண்ணன் முன் வணங்கிவிட்டு, "கோபாலா காட்டில் உள்ள உன் அண்ணனிடமே போய்க் கேள். அவன்தான் நமக்கெல்லாம் துணை" என்று பையனை ஒருவாறு தேற்றி, பள்ளிக்கு அனுப்பி வைத்தாள்.

நம்ம சின்னக் கோபாலனும், காட்டினருகில் வந்து "அண்ணா அண்ணா" என்று பாசத்துடன் தீனமாகக் கூப்பிட்டான். உடனே கண்ணனும், தன் காற்சலங்கை, கலீர், கலீர் என ஒலிக்க, கையில் புல்லாங் குழலுடன், கோபாலன் முன்வந்து நின்றான் "வா தம்பி போகலாம், ஏன் இன்று உன் முகம் வாட்டமடைந்து இருக்கிறது" என்று கோபாலனைப் பார்த்து, வாஞ்சையுடன் கேட்டான் கண்ணன். பையனும் தன்

நிலையை விளக்கி, "உபாத்தியாய ருக்கு, ஏதாவது ஒரு நல்ல பொருளைக் கொண்டு போய் கொடுக்க வேண்டும். அம்மா விடம் ஒன்றுமில்லே. அம்மா உன் னிடமே கேட்கச் சொன்னுள்" என்று கூறியழுதான்.

"தம்பி கவலைப்படாதே எது வேண்டுமானுலும், என்னிடம் கேள் நான் தருகிறேன்" என்று கூறி மாதவனும், ஒரு செம்பு நிறைய பால் பாவாசம் கொடுத்து, அருளினுன்.

கோபாலனும், மிகவும் சந் தோஷத்துடன், அதை வாங்கிக் கொண்டு பள்ளி சென்றுன். அங்கு மற்ற மாணவர்கள் எல் லாம், "ஐய பாருடா இவன் உபாத்தியாயருக்குப் பாயாசம் கொண்டு வந்திருக்கிருன், இதை யா கொண்டு வருவார்கள். ஒரு பட்டாடை, அல்லது பொன், வெள்ளி, நாணயம், ஏதாவது உயர்ந்த பொருள், கொண்டு வராமல் இதைப் போய், சாதா ரணமாக வீட்டில் சாப்பிடும், பாயாஸத்தைக் கொண்டு வந் திருக்கிருன்" என்று ஏளனம் பண்ணி நகைத்தார்கள்.

சின்னக் கோபாலனும், அவமா னத்தால் முகம் சிவந்து, அழுது கொண்டே உபாத்தியாயரிடம், பாயாஸச் செம்பைக் கொடுத் தான்.

உபாத்தியாயருக்கோ, பாயா ஸம் கொண்டுவந்து கொடுத்து, தன்னை சின்னக் கோபாலன், அவ மானப்படுத்திவிட்டதாக, மூக்கு மேல கோபம் வந்து விட்டது. பாயஸச் செம்பை எடுத்து, தூர வீசியெறிந்தார். பாயஸம் கீழ கொட்டிச் சிதறியது.

ஆனுல் என்ன ஆச்சர்யம், கீழே பாயஸமெல்லாம் கொட்டிவிட்ட போதும், மறுபடியும் செம்பில் பாயஸம் நிறைந்துவிட்டது. உபாத்தியாயரும் ஆச்சரியத் துடன், செம்பை எடுத்து ஒவ் வொரு மாணுக்கனுக்கும், பாய ஸத்தை ஊற்றிக் கொண்டே வர, செம்பில் குறையக் குறைய பாய ஸம் நிறைந்து கொண்டேயிருந் தது. இந்த விசித்திரத்தைப் பார்த்த உபாத்தியாயருக்கோ ஆச்சர்யம் தாங்கவில்லே. "கோபாலா இந்தச் செம்பு யார் கொடுத்தார்சள் உனக்கு" என்று வியப்புடன் கேட்டார்.

சின்னக் கோபாலனும் பணி வுடன் தன் காட்டிலிருக்கும் அண்ணனிடம் பெற்று வந்ததாக வும், தன் தாயார் அவனிடம் தான் எல்லாம், கேட்கச் சொன் ஞர்கள் என்றும், விபரமாகக் கூறினுன்.

உபாத்தியாயரும் சின்னக் கோபாலனைக் கூட்டி வந்து, காட்டினருகில் நிற்க வைத்து, "எங்கே உன் அண்ணனைக் கூப் பிடு" பார்க்கலாம் என்று கூறி ஞர். சின்னக் கோபாலனும் "அண்ணு, அண்ணு" என்று பல முறை கூவியழைத்தும், கண்ணன்

வரவில்லை. உபாத்தியாயரும், சகமாணுக்கர்களும் "இவன் சொல்வது பொய், பொய்" என்று கூச்சலிட்டு, ஏளனம் செய்தார்கள்.

சின்னக் கோபாலனே கோ.... வெனக் கதறி "கண்ணா நீவா, இல்லாவிட்டால், இதே இடத்தில் நான் உயிர்விட்டு விடுவேன்" என்று கதறியழுதான். சிறிது நேரத்தில் காட்டினுள் இருந்து, கலீர், கலீர் என்ற கண்ணனின் கால் சதங்கை ஒலி கேட்டது. அதைத் தொடர்ந்து, அவனுடைய தேனினும், இனிய வேய்ங்குழல் நாதம், கேட்டது.

அதைத் தொடர்ந்து "சின்னக் கோபாலா நீ நம் மேல் வைத்த தூய அன்பில் கட்டுண்டு, நீ என்னை நினைத்தபடி தோழனாக வந்து, உதவி புரிந்தோம். ஆனால் உன்னுடன் வந்திருக்கும், மற்றவர்களுக்கு அவ்வளவு பரிபக்குவ நிலை, இல்லையென்பதால் அவர்கள் முன் காட்சியளிக்க மாட்டோம். உன் கண்ணுக்கு மாத்திரம் நம்காட்சி தெரியும்" என்று கண்ணன் கூறி, சின்னக் கோபாலனுக்கு மட்டும் காட்சி கொடுத்தான். சின்னக் கோபாலனும் அனந்தப் பரவசத்தில் மூழ்கித் திளைத்தான்.

இதிலிருந்து இச்சிறுவனிடம் இருந்த, அன்பு எத்தகையது, அது கண்ணனை நேரில் கொண்டு வந்து நிறுத்தும் அளவு, உறுதியாகவும், தூய்மையானதாகவும், திண்மையானதாகவும் இருந்தது என்று அறியலாம்.

கலியுகத்தில் உயிர்கள் பகவத் நாமத்தை ஜபம் செய்வதாலேயே உயர் நிலையடையலாம் என்று வேதங்கள் கூறுகின்றன. அதுபடி இறைவன் நாமத்தை இடைவிடாது உச்சரித்து நம் மனத்தையும் இறைவன் திருவடிகளில் வைப்போமாக.



- 31-5-73 இரவு 10 மணி சுமாருக்கு சென்னையிலிருந்து டில்லி சென்ற இந்தியன் ஏர்லைன்ஸ் "போயிங் 737" விமானம் டில்லிக்கு அருகில் விழுந்து நொறுங்கியது. இதில் மத்திய உருக்கு அமைச்சர் மோகன் குமாரமங்கலம் உள்பட 48பேர் மரணமடைந்தார்கள்.
- சென்னை நகரில் மேலும் 300 ஆட்டோரிக்ஷாக்களுக்கு பர்மிட் அளிக்கப்பட்டுள்ளது. இந்தப் புதிய ஆட்டோ ரிக்ஷாக்கள் இன்னும் நான்குமாத காலத்துக்குள் ஓடத் துவங்கும். சென்னையில் ஏற்கனவே 600 ஆட்டோரிக்ஷாக்கள் உள்ளன. இந்தத் தகவலை சென்னை நகர போலீஸ் கமிஷனர் கே. ஆர். ஷெனாய் நிருபர்களிடம் தெரிவித்தார்.

# பஞ்சமூர்த்தி பூஜை விசேஷம்



ஜகத்குரு
காஞ்சி காமகோடி
பீடாதிபதி

'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்; ஆலயம் தொழுவது சாலவும் நன்று' என்பவ போன்ற பழமொழிகள் வழங்குகின்றன. தமிழ் பேசுமிடங்களிலெல்லாம் இப்படி மொழிகள் வழங்குகின்றன. பழமொழிகளால் நாம் தெய்வம் உண்டு என்று அறிகிறோம்.

இந்தத் தெய்வம் எங்கு உள்ளது? உலகம் முழுவதும் எங்கும் வியாபித்துள்ளது. தெய்வம் எங்கும் நிறைந்திருந்த போதிலும் அதை ஆலயத்தில் தொழுவது சாலவும் சிறந்தது. மற்ற இடங்களில வேறு பல இடையூறுகள் உண்டு. ஆனால் ஆலயத்தில் தெய்வம் தவிர வேறு எதுவும் இல்லை. தெய்வம்தான் உயர்ந்தது. அதிலும் உயர்ந்தது உண்டென்றால அது அன்னையும் பிதாவுமாகும். அதிலும் அன்னை தான் முதன்மை ஸ்தானம் வகிக்கிறாள். நாம் செய்யும் பாவத்துக்கு நமக்கு உணவே கிடைக்கக் கூடாது. ஆனால் பகவான் நம்மிடத்தில் பரிவுடன் இருப்பதனால் தான் நமக்கு நன்மைகள் புரிகிறார்.

பகவான் ஒவ்வொரு பிராணியிடத்திலும் பரிவுடன் இருக்கிறார். இத்தகைய பரிவு தாயிடத்தில்தான் ஏற்படும். அதனால்தான் 'தாயினும் சாலப் பரிந்து' என்று தெய்வத்தைப் பற்றிக் கூறியுள்ளார்கள். தாயினும் நல்லான் அல்லது தாயினும் நல்லாள் போன்ற தெய்வங்கள், திருச்சியிலுள்ள தாயுமானவர் போன்ற தெய்வங்கள், பகவானின் அன்னை ஸ்வரூபத்தைக் காட்டுகின்றன.

தெய்வத்துக்கு வேறுபாடு கிடையாது. தெய்வம் எல்லாமாகவும் உள்ளது. அதுபோலப் பரிவுடனும் விளங்குகிறது. பரிவுக்கு எடுத்துக்காட்டாகத்தான் தாய்

உபயோகிக்கப்படுகிறாள். காவிரியைச் சிறப்பித்துக் கூறும்போது தட்சிண கங்கை என்று கங்கையோடு ஒப்பிடுகிறோம். அப்போது தான் காவிரியின் சிறப்புத் தெரியும். அதுபோலப் பகவானின் பரிவை அளப்பதற்காகத் தாய் உபயோகிக்கப் பட்டிருக்கிறாள்.

எல்லா உருவங்களும் பகவானின் உருவந்தான். ஆனால் நமக்கு ஓர் உருவம் தேவை. அவ்வுருவத்துக்கு, பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத முகம் வேண்டும். எல்லாருக்கும் நல்லதே செய்ய வேண்டும் என்ற எண்ணமுடையதாக ஓர் தெய்வம் இருந்தால் அது எப்படி இருக்குமென்று பக்தர்கள் மனக்கண்முன் உருவாகிற தெய்வமாகப் பகவான் உருக் கொண்டு வர நினைத்தால் அது தாயைத் தவிர வேறு தெய்வமே அல்ல. அதனால்தான் சகல சக்திகளும் வாய்ந்த பகவான் பராசக்தியாக விளங்குகிறார்.

தமிழ்நாட்டில் ஐந்தாறு விசேஷங்கள் உண்டு. அதில் ஒன்று- இங்கு ஒவ்வொரு சந்திலும் பிள்ளையார் கோவில் உள்ளது. மற்றத் தேசங்களில் அவ்வாறு இல்லை. இன்னொன்று - ஒவ்வோர் ஊரிலும் ஐயனார் கோவில் உண்டு. மலையாளத்தில் ஒவ்வோர் ஊரிலும் கோவில் வீடு என்று ஒன்று உண்டு. அங்கு ஐயனார் பூஜை முதலியன நடத்துவார்கள். இதற்குச் சாத்தான் பூஜை என்று பெயர். இவையே தமிழ் இலக்கியங்களில் கொற்கை சாத்தன் என்ற தெய்வங்களாகக் கூறப்பட்டுள்ளன. இதைத்

தனித் தர்மராஜா கோவில், திரௌபதி அம்மன் கோவில் முதலியனவும் உண்டு.

தமிழ் நாட்டில் மட்டும் எல்லாத் தெய்வங்களின் கோவில்களும், முக்கியமாக முன்பு கூறிய ஐந்து தேவாலயங்களும் எங்கும் உண்டு. மலையாளத்தில் சிவன் விஷ்ணு ஆலயங்கள் உண்டு. ஆனால் அம்பாள் கோவில் இவற்றுடன் கிடையாது. நம் நாட்டில் பல்லவ மன்னர்கள் காலத்தில் கற்களையும் பெரும் பெரும் பாறைகளையும் குடைந்து கோவில்கள் அமைத்துள்ளார்கள்.

சாதாரணமாகச் சோழமன்னர் காலத்திலும் மற்றத் தமிழ் மன்னர் காலத்திலும் கோவில்கள் கற்களைக் கொண்டு கட்டப்பட்டன. இத்தகைய கோவில்கள் காக்கை போன்ற பறவைகளின் எச்சத்தால் உண்டாகும் மரங்களினால் இடிந்துவிடுகின்றன. ஆகவே இதை யோசித்துப் பல்லவ மன்னர் காலத்தில் பல்லவர்கள் கற்பாறைகளைக் குடைந்து கோவில்களை அமைத்தனர். இவைபோன்ற கோவில்கள் திருச்சியில் உச்சிப்பிள்ளையார் கோவிலுக்குப் போகும் வழியிலுள்ள குகையும், திருவெள்ளறை முதலிய இடங்களிலும் காணலாம். திருச்சியைச் சுற்றிச் சுமார் நாற்பது ஐம்பது கோவில்கள் இவ்வாறு உள்ளன. பல்லவர்களுடைய கோவில்களில் சிவன், விஷ்ணு, பிள்ளையார் ஆலயங்கள் உண்டு. பல்லவர்களின் கல்வெட்டுக்களில், 'காமகோட்டநாச்சியாரை எழுப்புவித்து' என்ற வாக்கியங்களைக் காணலாம். எந்த ஊரில் அம்மன் தனியாக உள்ளதோ அந்தக் கோவிலுக்குக் 'காமகோட்டக் கோவில்' என்று பெயர். பல்லவருடைய காலத்தில் இவ்வாறான அம்மன் கோவில்கள் ஏற்பட்டன என்பதற்கு இந்தக் கல்வெட்டுக்கள் சான்றாகும்.

சிவன் கோவிலில் பிரசாதம் வாங்கக்கூடாது. 'சிவன் சொத்து குலநாசம்' என்று கூறுவர். ஏனெனில், சிவபெருமான் தம் உடைமைகள் முழுவதையும் சண்டிகேசுவரருக்கு எழுதி வைத்து அவருக்கு வரம் அளித்துவிட்டார். அதனால் நைவேத்தியங்கூடச் சண்டிகேசுவரருக்குத்தான் சொந்தம். ஆகவேதான் சிவன் கோவிலகளில் சண்டிகேசுவரர் கோவிலுக்கும் ஈசுவரனின் மூலஸ்தானத்திற்கும் ஓர் துவாரம் வைத்துத் தினமும் ஸ்வாமியின் மேலிருந்து கழற்றும் மாலையைக்கூட அந்தத் துவாரத்தின் வழியே சண்டிகேசுவரர் சந்நிதியில் போட்டுவிடுவார்கள்.

ஆகவே சிவனுடைய சந்நிதியிலிருந்து பக்தர்கள் பிரசாதத்தைப் பெற முடியாது அதற்காகத்தான் அம்பாளின் திருவருவையும் அங்குப் பிரதிஷ்டை செய்து அம்பாளுக்கு நிவேதித்து அந்தப் பிரசாதத்தைப் பக்தர்கள் பெறுகிறார்கள். இதற்காகத்தான் அம்பாளின் திருவுருவங்கள் சிவன் கோவில்களில் உள்ளன.

வீடுகளில் பூஜை செய்பவர்கள் சிவன் விஷ்ணு அம்பாள் விநாயகர் சுப்பிரமணியர் ஆகிய பஞ்சமூர்த்திகளை வைத்து பூஜிப்பது தான் சிறந்தது. சிவனை மட்டும் பூஜிப்பதை விடவும், தனித்தனியாகப் பூஜிப்பதை விடவும் பஞ்சமூர்த்திகளை ஒருங்கே பூஜிப்பது மிகுந்த விசேஷமாகும். தெய்வம் அம்பாளாக வந்தால்தான் நமக்குப் பிரசாதம் கிடைக்கும் அதனால் தெய்வம் தாயாக வந்தால் தான் நமக்குப் பிரசாதம் கிடைக்

கும். அதனுல்தான் 'அன்னேயும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்றும், 'தாயினும் சாலப் பரிந்து' என்றும் கூறப்பட்டுள் ளது.

இத்தகைய சக்தி வாய்ந்த அம்பாளேத் தியானிப்பதற்கு ஆதிசங்கரர் ஸௌந்தர்ய லஹரி என்று அம்பாளின் மேல் நூறு ச்லோகங்களே இயற்றியுள்ளார்.

அவற்றை ஒவ்வொருவரும் படித்துப் பயன் பெறவேண்டும். நாம் கண்களால் சில அழகைக் காண்கிறோம். இவையெல்லாம் சீக்கிரத்தில் மறந்துவிடக் கூடி யவை.

ஆனுல் மகாகவியின் வாக்கு என்றும் மறக்கக்கூடாதது. மறை யாதது. பரதேவதை சங்கீதம், சாகித்தியம் இரண்டையும் கொண்டிருக்கிருள். சங்கீதத் தைக் காதால் கேட்டால் அது மறந்துவிடும். மணலில் ஜலம் விட்டால உடனே ஜலம் உறிஞ் சப்பட்டு மறைந்துவிடும். மீண் டும ஜலம் விட்டால்தான் அதல் ஜலய காணலாம்.

அதுபோலக் காதால் கேட்ட சங்கீதமும் மறைந்துவிடும். ஆனுல் மகாகவியின் வாக்கு நமக் குள்ளே போய்விட்டால் அது என்றும் மறையாது. உள்ளே போய் அது நமது உள்ளத்தைத் தூய்மைப் படுத்தத் தொடங்கி விடும். அதுவும் ஆசார்யரின் வாக் கென்ருல் அதன மகிமையைக் கூற வேண்டுமா?

நன்றி காமகோடி பிரதீபம்.

# அன்பு முரசு

ஸ்ரீ சாரதாதேவி

மனிதப்பிறவி துன்பங்கள் நிறைந்தது. இறைவன் பெயரை ஓதிக்கொண்டே அவற்றை எல்லாம் சகித்துக்கொள்ள வேண்டும். இறைவனே மனித உருக்கொண்டு வந்தாலும் அவனுடைய மனம், உடல் இவற்றின் காரணமாக உண்டாகும் இன்னல்களிலிருந்தும் தப்பிக்க இயலாது.

அவதார புருஷர்களும், முனிவர்களும், யோகிகளும்கூட, துன்பம் அனுபவித்தே தீரவேண்டும். ஏனெனில், சாதாரண மனிதர்கட்கு, தகாததைச் செய்தாலும், தக்கதைச் செய்யாமையாலும் ஏற்படும் பாவங்களை அம்மகான்கள் தாங்களே ஏற்றுக்கொண்டு, உலக நன்மைக்காகத் தம்மையே பலியாக்குகின்றனர்.

எந்த மனிதனும் எப்போதும் துன்பத்தை அனுபவித்துக் கொண்டே இருக்கமுடியாது. எவனும், ஆயுள் முழுவதும் துயரத்திற்கும் ஆளாகமாட்டான். ஒவ்வொரு செயலும் முறையே அதன்தன் பயனைத் தருகின்றது. அதற்கேற்பச் சந்தர்ப்பங்களையும் ஒருவற்குக் கொணர்கிறது

என் குழந்தை சேற்றையும் புழுதியையும் பூசிக்கொண்டிருந்தால், அதைக் கழுவி என் மடி மீது அமர்த்திக்கொள்ளல் என் கடமையல்லவா?

குழந்தாய்! கவலையுறாதே! இவ்வுலகப் பந்தங்களெல்லாம் நிலையில்லாதனவே, இன்று அவையே ஸாரமும் பயனும் எனத்தோன்றும். ஆனால், நாளை அவை மறைந்து விடும். இறைவனுடன் உள்ள தொடர்பே உண்மையானது.

உன் உள்ளத்தை விண்மீனைப் போல் தூயதாக ஆக்க வேண்டுமென இறைவனை வேண்டு. கால முறை தப்பாமல், முழுமனத்துடன் செய்யப்படும் ஜெபத்தின் பலனாக, இறைவன் உன்னுடன் பேசுவதை நீ உணர்வாய். உன்னுடைய விருப்பங்களெல்லாம் பூர்த்தியடையும்; களங்கமிலாப் பேரின்பத்தை நீ காண்பாய்.

ஒருவன் இறைவனிடம் சரண் புகுந்தால், தவிர்க்க முடியாத விதியின் கட்டளைகளும் அகற்றப் படுகின்றன. இத்தகைய மனிதனது தலையெழுத்தை விதியே

தனது கரங்களால் துடைத்து விடுகின்றது.

இன்னல்கள் நேர்கின்றன; ஆனால் அவை என்றும் இரா. பாலத்தினடியில் ஓடும் நீரைப் போல்அவை ஓடிமறைந்துவிடும்.

'என்னைப் பிரார்த்திப்போர்க்கு இறக்கும் தருவாயில் யான் அருகில் நின்று அபாயம் அளிப்பேன்' என்று குருதேவர் (ஸ்ரீ இராம கிருஷ்ணர்) சொல்வது வழக்கம். மேற்கூறியவை, அவரது வாயினின்றும் வெளிவந்த சொற்களாகும்.

உங்கள் மனச்சுமையை ஸ்ரீ இராம கிருஷ்ணர்முன் இறக்கி வையுங்கள். கண்ணீருடன் உங்கள் துன்பங்களை எடுத்துரையுங்கள். உங்கள் கைநிறைய நீங்கள் விரும்பியவற்றை அவர் தருவதைக் காண்பீர்கள்.

யாவருடைய பொறுப்பை நான் ஏற்றுக்கொண்டிருக்கிறேனோ, அவர்கள் பந்தமற்றவராம் வரை, எனது இப்பூதவுடல் அழிந்த பிறகும் எனக்கு முக்தி யுண்டு என்று நினைக்கிறீர்களா?

நான் சதா அவர்களுடனேயே வாழ வேண்டும், நன்மையோ, தீமையோ, — அவர்களைப் பற்றிய முழுப்பொறுப்பையும் நான் ஏற்றுக்கொண்டிருக்கிறேன். என்னுடையவர் என யான் வரித்தவர்களை நான் சர்வசாதாரணமாக ஒதுக்கிவிட முடியாது.

உண்மையில் இவ்வுலகமாகிய கடலைக் கடக்க விரும்பும் ஒருவன் எப்படியாவது தன் பந்தங்களை அறுத்துக் கொண்டு விடுவான். யாராலும் அவனை அவற்றில் சிக்க வைக்க முடியாது.

அஞ்சேல் இறைவன் உன்னைப் பாதுகாத்துக் கொண்டேயிருக்கிறான். அவனுக்குரிய பணிகளைச் செய் சாதனைகள் பழகு. தினந்தோறும் சிறிதுவேலை செய்தாலும் மனத்திலிருந்து வீணான நினைவுகளை நீக்கிவிடும்.

இப்பிரபஞ்சம் முழுவதும் பரந்து நிற்கும் இறைவனிடம் வேண்டிக் கொள்க. அவன் தனது கருணையை உன்மீது பொழிவான்.

துக்கத்திலடிபட்ட உங்கள் இதயத்தை இறைவனுக்குத் திறந்து காட்டுங்கள். கண்ணீர் சிந்தி, 'இறைவனே! என்னை உன்பால் இழுத்துக்கொண்டு மன அமைதி தந்தருள்க' என்று மனமாரப் பிரார்த்தியுங்கள். அவ்வாறு எப்போதும் செய்வதன் மூலம் படிப் படியாக, உங்கள் மனம் அமைதி அடையும்.

இறைவனது அருளே காசி முழுதும் நிரம்பியிருக்கின்றது. ஆஸ்திகனோ, நாஸ்திகனோ, வேறுமதத்தனோ, பூச்சியோ அங்கு இறக்கும் எந்த உயிரும் முக்தியடையும். அநேக பாவிகள் காசிக்கு வந்து விஸ்வநாதரது உருவைத்தொட்டு தம் பாவத்தினின்றும் விடுதலை பெறுகின்றனர்.

இறைவனைத் தொழுதாலும், தொழாவிட்டாலும், மனம் புரிந்து கொள்ளாத ஒருவன் பாதியளவு விடுதலை பெற்றவனாகிறான். கடவுளிடம் அவனுக்குச் சிறிதளவு பற்று ஏற்படுவதாக உணரும் போது, அவன் வெகு வேகமாக இறைவனைச் சென்று அடைகிறான்.

கடவுள் அவனவனுக்கே உரிய பொருள். அத்தொடர்பே நிலையானது. இறைவனிடத்து அவனவன் கொள்ளும் அன்பின் முதிர்ச்சிக்கு ஏற்றவாறு, ஒருவன் இவனை உணர்கிறான். அஞ்சற்க! யாரோ ஒருவன் உன்னைப் பாது காத்துக் கொண்டே யிருப்பதாக எப்பொழுதும் எண்ணிக்கொண்டிரு.

●

● திருமாலின் பூம்பொழில் ஸ்ரீரங்கம் ஆகும். நாற்புறமும் இருபெரும் காவிரி, கொள்ளிடம் ஆறுகளால் சூழப் பெற்றும், தம்மிடையே பலநீர்க் கால்வாய்களையும், வானளாவிய தென்னை, மா, பலா மரச் சோலைகளையும் பொருந்திய இந்நிலப் பரப்பு ஒருஅழகிய சிறு தீவாகும்

# காசி

தி. ஜா. ராஜு

இந்துக்கள் சமய அறிவு பெற்ற நாளிலிருந்து இந்த நகரம் புனிதமானதாகக் கருதப்பட்டு வருகிறது. இந்திய நாட்டிலுள்ள எல்லாப் புனிதத் தலங்களும் தங்களைக் காசியுடன் ஒப்பிட்டோ மிஞ்சிய தாகவோதான் குறிப்பிட்டு வருகின்றன. ஆனால் இவை அனைத்தின் தொகுப்பெண்ணிக்கை காசி என்றால் அது மிகையன்று.

'காசி நகர்ப் புலவர்', என்பது மகாகவி பாரதியின் வாக்கு. பாரதி தம் வாழ்நாளின் தொடக்கப் பகுதியை அங்கு கழித்தவர். அந்த நகரத்தின் சமய, அரசியல் இலக்கிய முத்திரைகள் அவர் மேல் மிக நன்றாகப் பதிந்தள்ளதை அவருடைய இரசிகர்கள் உணரலாம்.

காசியின் புனிதத்திற்குச் சிறப்பான காரணம் கங்கை ஆறு. எத்தனையோ அழுக்கையும், குப்பையையும் ஈன மனிதர்கள் இதில் கொண்டு வந்து சேர்த்தாலும் தன் தூய தன்மை கெடாமல் ஓடுகிறது இந்தப் புனித ஆறு. அதன் விளைவால் இந்த நகரமும் தெய்வத்தன்மை பெறுகிறது.

இது இந்துக்களின் புண்ணியத் தலமாகையால் இதன்மீது பல தாக்குதல்கள் நிகழ்ந்தன. மொகலாயர் ஆட்சியில் இதன் பெயரே முகம்மதாபாத் என்று மாறிற்று. விசுவநாதரின் தூய ஆலயத்தையே ஔரங்கசேப் இடித்துத் தள்ளினான். அதைப் புதுப்பித்துக் கட்டியவர் இந்தோர் ராணி அகல்யாபாய். பொன் கூரை வேய்ந்தவர் சீக்கிய மன்னர் ரஞ்சித் சிங். இன்றும் ஆலயத்தின் பிற்பகுதி பள்ளி வாசலாக விளங்கி வருகிறது.

காசி நகரத்தில் யாத்திரிகர்களுக்குப் பெரும் தொந்தரவு தருபவர்கள் பண்டாக்கள். நம்முடைய சமய அறிவின் துணைமை இத்தகைய ஞானசூனியர்களுடன இருப்பது நமது தீயூழ். அண்ணல் காந்தியடிகளே ஒரு தட்வை பண்டா ஒருவரிடம் சிக்கிக் கொண்டார். சுவைமிக்க அந்த நிகழ்ச்சியைச் சத்திய சோதனையில் விவரிகிறார் அண்ணல்.

- விசுவநாதரை வழிபடச் சென்ற அடிகளை மிகவும் தொந்தரவு செய்தார் பண்டா ஒருவர். அடிகள் தட்சிணையாகக் காலணா கொடுத்தார். (பழைய காசு-இன்றைய ரூபாயின் கால் வீசம் பங்கு-என்றாலும் இன்றைய இருபத்தைந்து காசின் வாங்கும் சக்தி அன்று அதற்கிருந்தது.) சினங்கொண்ட பண்டா அண்ணலைச் சபித்து அதை வீசி எறிந்தார். அடிகள் சிக்கனம் மிக்க வணிகராயிற்றே! அவர் அதைப் பொறுக்கிக் கொண்டார். 'பாவி, இதை நான் பெற்றுக் கொள்ளாவிட்

டால் நீ நரகத்துக்குப் போவாய்', என்று கூறி அதை அவரிடமிருந்து திரும்பப் பெற்றுக் கொண்டார் பண்டா. அன்று அடிகள் அந்தக் காசைக் கொடுக்காமலிருந்தால் அவர் நரக வாசம் செய்யும்படி நேரிட்டிருக்கும்.

கங்கையின் கரையிலே மிகப் பெரும் அறிவாளிகளும் ஞானியரும் வாழ்ந்திருக்கின்றனர். அவர்களுள மகாத்மா கபீரும், கோஸ்வாமி துளசியும் முக்கியமானவர்கள். இருவரும் அவதி மொழியில் தான் எழுதினார்கள். (அவத—அயோத்தியின் திரிபு) ஒருவர் சற்குண உபாசகர். மற்றவர் நிர்க்குணப் பிரம்மத்தை வழிபட்டவர்.

கபீர் கைக்கோளராய் வாழ்வு நடத்தினர். தன்னுடைய பணி முழுவதும இறைவனுக்காகவே செய்யப்படுவதாகக் கருதினர். ஆடை நெய்யும் போதுகூட அதை நாராயணனுக்கென்றே நெய்தார். "ஜீனி, ஜீனி, பீனி சத்தரியா', என்று அவன் பாடிக் கொண்டே தறியை இயக்கிய காட்சியை அகக் கண்களால் கண்டு ஆனந்தப்படுகிறார் பூஜ்ய வினோபாஜீ.

கபீர் மூட நம்பிக்கைகளுக்குப் பரம வைரி. 'கங்கையில் மூழ்கி ஒருவன் முக்தி பெறலாமென்றால் ஆற்றிலுள்ள மீன்கள் எல்லாம் மோட்சத்திற்கல்லவா போக வேண்டும்?' என்று சினந்து கேட்கிறார். ஆனால் அவரே 'என் மனம் கங்கையைப் போல் தெளியுமானால் இறைவன் என்னைத் தேடி ஓடி வருவானே' என்கிறார். கங்கை என்பது புனிதத்திற்கு மறு பெயர்.

'ஈதற்குச் செய்க பொருளை' என்கிறது திரிகடுகம். பொருளீட்டுவதன் பயனே ஈதல் என்று கருதும் தனவணிகர் சமூகத்தினர் எல்லா சமயத் தலங்களிலுமே இறைவன் பணியைச் செம்மையுறச் செய்து வருகின்றனர். சமயத் தலங்களில் தலைமையிடம் பெற்ற காசியிலும் அவர்கள் புரியும் தொண்டு நல்லவர்கள் உள்ளத்தை நெகிழ வைப்பதாகும். ஆலயங்களைப் புதுப்பித்தல அறக் கட்டளைகளை ஏற்படுத்தி அவற்றைச் சரிவர நிறைவேற்றுதல், யாத்திரிகர்களுக்கு உண்டியும் உறையுளும் அளித்தல், எலலாவற்றிற்கும் மேலாக இன்முகம் காட்டி நன்மொழி பேசுதல், ஆகிய துறைகளில் அவர்களை மிஞ்சுவதற்குக் காசியில் யாரும் கிடையார்.

காசியை நான் நேசிக்கிறேன். அதன் அழுக்கு, சாக்கடை துர்க்கந்தம், மயானம் உள்பட அனைத்தையும் நேசிக்கிறேன். ஏனெனில் காசி என்பது என்னிலிருந்து வேறுபட்டதல்ல. கங்கை ஒன்றை மட்டும் என்னுள் ஓடச் செய்ய முடியுமானால் மற்றத் தூய்மைக் கேடுகள் எவையும் என்னைப் பாதிக்கமாட்டா.

காசியில் செய்யப்படும் ஒவ்வொரு தொண்டும் இந்து சமய வளர்ச்சிக்குப் பேருதவி புரிவதாகும்.

● தானியங்களை விற்று வரும் தொகை, பால், தயிர் முதலியன மூலம் கிடைக்கும் பணம், கோழி, முட்டை முதலியன விற்று வரும் வருமானம், விதை, செடி, நாற்று, உரம் முதலியவற்றை விற்கும் போது கிடைக்கும் வருமானம், கூலி, குத்தகை, வண்டியை வாடகைக்கு விடுவதால் கிடைக்கும் தொகை, வட்டி ஆகிய வகையில் கிராமங்களின் வருமானம் கிடைக்கிறது.

# சமயபுரம் மாரியம்மன் கோவில்

டி. நாகராஜன் பி. எஸ். ஸி.

சமயபுரம் திருச்சி மாவட்டத்தில் லாலகுடி வட்டத்தில் கொள்ளிடம் ஆற்றுக்கும் திருவரங்கத்துக்கும் வடக்கில் ஏழுகல் தொலைவில் அமைந்துள்ள ஓர் சிங்காரச் சிற்றூர்.

கரிகால் பெருவளத்தான் என்ற புகழ் மிக்க சோழ அரசனால் வெட்டப் பெற்ற பெருவள வாய்க்கால் கொள்ளிடத்திருந்து கிளையாகப் பிரிந்து ஆலயத்தை அணைத்துச் செல்லுகிறது.

இவ்வூர் ஓர் புண்ணிய ஸ்தலம் மட்டுமல்ல; மிகவும் பழமையான வரலாற்றுப் புகழும் கொண்டது. பழமையின் சின்னமாக பூமிக்கடியில் கட்டிடங்களையும் சின்னங்களையும் இன்றும் பார்க்கலாம். இவ்வூருக்கு வருவாய்த்துறை பதிவேட்டில உள்ள பெயர் கண்ணனூர். இவ்வூருக்கு கண்ணபுரம, விக்ரமபுரம், மாகாளிபுரம் என்ற பெயர்களும் உண்டு.

மைசூர் மாநிலத்தைச் சார்ந்த துவார சமுத்திரத்தைத் தலை நகராகக் கொண்டு, 13 ம் நூற்றாண்டில் ஆண்ட ஹொய்சாலமன்னர்களுக்கு தென்னகத்திலே சொத்துக்கள் இருந்தன என்ற செய்தியினை பெங்களூர் தொல்பொருள் காட்சிச் சாலையில் உள்ள ஓர் செப்புப் பட்டயம் மூலம் அறியலாம்.

ஹொய்சால மன்னர்களுள் 2 வது நரசிம்மன் தமிழ் நாட்டில் ஆண்ட சோழனுக்கு உதவியாக வந்து பகைவர்களை விரட்டிச் சோழனை அரியணையில் அமர்த்தினான். இவனது புதல்வனான வீர ராமேசுவரன் தன் வலிமையால் தனது அரசைத் தமிழ் நாட்டில் நிலை நிறுத்தக் கருதி கி. பி. 1253ல் (தற்போதைய சமயபுரத்தை) கண்ணனூரை விக்கிரமபுரம் என்ற புதிய பெயரில் தலைநகராக்கினான்.

திருவானைக்கா ஆலயத்தின் 3ம் பிராகாரத்தின் வட சுவரில் ஹொய்சால மன்னன் வீர ராமேசுவரன் ஆட்சிக்கு வந்த இரண்டாம் ஆண்டில் (பி. பி. 1253) ஏற்பட்ட கல்வெட்டில் இம்மன்னன் விக்கிரமபுரம் என்னும் கண்ணனூரில பொய்ச் சலேசுவரர் ஆலயம் எடுத்த செய்தி கூறப்பட்டுள்ளது.

இவ்வூரை தலைநகராக்கியதற்கு மற்றொரு காரணம் சோழ நாட்டில்தான் மன மகிழ்வோடு வாழ வேண்டுமென்ற அயரா ஆசை தான்! ஹொய்சால மன்னர்களிலே புகழின் உச்சியில் வீற்றிருந்தவன் வீர ராமேசுவர மன்னன்தான். இவன் கர்நாடக தேசத்தின் சந்திரன் (Moon of the Carnatic) என்று புகழாரம் சூட்டப்பட்டவன்.

அக் கோயிலுள்ள அம்மன் மிகச் சிறந்த வேலைபாடுடன் செதுக்கப்பட்டு உள்ளது. அழகான கற்சிலை. இச்கோயிலின் வாயிலிலே இவ்வரசனின் புதல்வனை வீரராமதேவன் காலத்

தில் ஏற்பட்ட கல்வெட்டுக்களில் பொய்சலேசுவரம் என்றே குறிப் பிடப்படுகின்றன. உள் பிராகா ரத்தில் உள்ள பல மண்டபங்கள் இடிந்து கிடக்கின்றன. ஆலயத் தின் எதிரில் உள்ள கவின் அழகும் கலையழகும் நிரம்பிய குளத்தின் மண்டபங்களும் அழகிழந்து கிடக் கின்றன. அவற்றின கருங்கற்கள் கொள்ளிடம் காவிரி ஆகிய இரு பெரும் நதிகளின் குறுக்கே கட் டப்பெற்ற பாலங்களுக்குப் பயன் படுத்தப் பட்டுள்ளன.

இவ்வூரில் உள்ள ஒரு மைல் நீள முள்ள கரையும் பள்ளங்களும் இடிந்துபோன மதிற்சுவர்களும், பழைய கோட்டையின் எஞ்சிய சின்னங்களாக காணப்படுகின் றன. இக்கோயிலுக்குப் பக்கத்தில் மாளிகைகளும் கோட்டைகளும் இருந்து அவை காலதேவன் கையில் சிக்கிச் சீரழிந்து போன தாகத் தெரிகிறது.

இச் செய்திகளால் ஹொய்சால வமசத்தைச் சார்ந்த 2 ம நரசிம் மன் அவனது குமாரன் வீர சோமேசுவரன அவனது செல்வன் வீரராமதேவன் முதலிய மூன்று அரசர்கள் இவ்வூரை தலைநகர மாகக் கொண்டு ஆண்டதாகத் தெரிய வருகிறது.

18ம் நூற்றாண்டில் 1752ல் ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்கார ருக்கும் மூண்ட போரில் ராபர்ட் கிளைவ் பேராபத்திலிருந்துபிரெஞ் சுப்படையினை இங்கேதான் முறி யடித்து ஆங்கில அரசை நிலை நிறுத்தினான். இப்போரின் போது இங்குள்ள பொய்சலேசுவரர் கோயிலும் மாரியம்மன் கோயி லும் போர் வீரர்களின் பாசறை யாகப் பயன் பட்டன. எனவே பலவாற்றாலும் இத்தலம் பழம் பெரும் வரலாற்றுப் புகழினைச் சுமந்து நிற்கிறது.

இத்தகைய வரலாற்றுப் புகழை தன்னகத்தே கொண்ட சமயபுரம் என்ற புண்ணிய பூமி யின் நட்ட நடுவிலே சக்திமிக்க மாரியம்மன் கோயில் கொண்டுள் ளாள்.

இவ்வம்மன் ஹொய்சால மன்ன ரால ஸ்தாபிக்கபபட்டது. விஜய நகர மன்னர்களால் போற்றப் பட்டு வந்தது. இக் கோயிலில் உள்ள உற்சவ விக்கிரகம் விஜய நகர அரசர்களது குடும்பத்தின ரால் முதல் முதலில் முறையாக பூஜிக்கப்பட்டு வந்ததாகவும் அநத சாம்ராஜ்யம் சரிவு அடைந்த போது இங்கே கொணர்ந்து ஓர் சிறிய வீட்டில் பிரதிஷ்டை செய்து வழிபட்ட தாகவும சொல்லப்படுகிறது.

1706 — 1732க்கு இடைபட்ட காலத்தில் மதுரையில் ஆண்ட விஜயரங்க சொக்கநாதன் என்ற அரசர் திருவரங்கம் பெரிய கோயி லில் மிகவும் ஈடுபாடு கொண்ட வர். அவர் தனது குடும்ப தெய்வ மாகிய மாரியம்மனுக்கு 1720ல் கோயிலொன்று சமயபுரத்தில் எடுப்பித்ததாகவும் சொல்லப்படு கிறது. விஜயரங்கசொக்க நாதன் சிறந்த பக்திமான். மதுரை, திரு வரங்கம் ஆகிய இரு பெருங் கோயில்களுக்கும் ஏராளமான சொத்துக்களையும், விலையுயர்ந்த பொன்னும் மணியும் அள்ளி அள்ளி வழங்கியவன். அவனுக்கு திருவரங்கம் கோயிலிலே தந்தத் தால் ஆளுயர சிலையொன்று எடுக் கப்பட்டுள்ளது.



ஆசிரியரும் வெளியிடுபவரும் : T ராமனுஜம், 231, ஆழ்வார் திருநகர் சென்னை-600087 அச்சிடுபவர்: கோனடா. காசி. சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ். டி. ஜ. டி. நகர், சென்னை 600035